உ

கடவுள் துணை.

தெய்வத்தன்மை பொருந்திய

# திருவள்ளுவநாயனார்

திருவாய்மலர்ந்தருளிய

# ஞானவெட்டி - ௲௫௱.

இஃது

சரவணபுரம்

## சண்முகமுதலியாரால்

பார்வையிடப்பட்டு

புரசபாக்கம்

## ஏழுமலைப்பிள்ளையினது

விவேகவிளக்கஅச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

கடவுள் துணை.

# * ஞானவெட்டி.

## பாயிரம்.

### காப்பு.

### விருத்தம்.

அண்டபிண்டநிறைந்துநின்றஅயன்மால்போற்றி
  யகண்டபரிபூரணத்தினருளைப்போற்றி
மண்டலஞ்சூழிரவிமதிசுடரைப்போற்றி
  மதுரதமிழோதுமகத்தியனைப்போற்றி
எண்டிசையும்புகழுமெந்தன்குருவைப்போற்றி
  யிடைகலையின்சுழிமுனையின்கமலம்போற்றி
குண்டலிக்குளமர்ந்துநின்றகுகனைப்போற்றி
  குருமுநியின்தாளிணையைப்போற்றிபோற்றி. (௧)

குகனருளின்கிருபையினாலிந்நூல்ஞானங்
  கூர்ந்துநவசித்தர்மொழிகுறித்துஆய்ந்து
புகழமிர்தச்செந்தமிழாயிரத்தைஞ்ஞூறு
  புகலவும்பூதலங்களெல்லாஞ்செழித்துவாழ்க
அகமகிழுமம்பிகைப்பெண்ணருளினாலே
  யவனிதனில்ஞானவெட்டியருளயானும்
நிகழ்திருவள்ளுவனயனுரைத்தவேத
  நிரஞ்சனமாநிலவுபொழிரவிகாப்பாமே. (௨)

நிலவுபொழியிரவிமதியருளினாலே
  நின்றிலங்குநாதவிந்தினிருவிகாப்பு
வலமிடமாய்சூழ்ந்துவருங்காரசாரம்
  வழலையெனுமாமதுரவாணிகாப்பு
உலகமதிற்கடல்சூழ்ந்தபுவனைவாலை
  யோங்காரமூலகணபதியேகாப்பு
சலமதிதசனகாதிரிஷிகள்பாதஞ்
  சடாதாரசூக்ஷமசடாதாரங்காப்பாம். (௩)

---

* ஞானவெட்டி-என்பது-ஞானவழி.

சடாதாரமதிலிருக்குந்தவளவாணி
சரஸ்வதியும்பிரமன்பதமாலின்பாதம்
நெடாழியிலட்சுமிப்பெண்ணருளின்பாதம்
நிரஞ்சனருத்திரன்பாதநேமிபாதம்
கடாகம்மெல்லாநிறைந்துநின்றமயேசன்பாதங்
கருணைமயேஸ்வரியினிருகமலபாதம்
தடாதசதாசிவத்தின்மனோன்மனியின்பாதஞ்
சாம்பசிவன்பொற்பதஞ்சத்ததமுங்காப்பாம். (௪)

பாதமடிமூலநடுவிந்தின்மூலம்- பராபரையின்வீடுபரப்பிர்ம்மவீடு, ஓதுசந்திரபுஷ்கரணிமாலின்வீடு-ஒரெழுத்தாய்நின்றிலங்குமுருத்திரன்வீடு, நாதவிந்தின்மேருமுடி சுடரின்வீடு -நாதாந்தமயேஸ்வரத்தின்வாயுவின்வீடு, சூதமுனியீசனுறவாடும்வீடு - சோதியெனுமாக்கினையின்காப்புத்தானே. (௫)

ஆக்கினைக்குள்சத்தம்பிரிதீவுபீட - மப்புவின்வீடுவன்னிவாயுவின்வீடு, எக்கமில்லாவாதாசமேருவீடு-இரவிமதிசுடரிலகுமின்பவீடு, பார்க்கபணுமுடிநடுவில்நடனஞ்செய்யும் - பராசத்திசிவசிங்காதனத்தின்வீடு, பூர்க்குமலர்வாசியிருந்துலவும்வீடு - புகழ்பெரியவைம்பூதம்புலன்காப்பாமே. (௬)

பூதாதியிருந்துவிளையாடுபீடம்- பொற்கமலமாயிரத்தெட்டிதழின்பீடம், நாதாக்கள்திருநடனமௌனபீடம் -நத்தியொளிவிந்துசெகநாதபீடம், வேதாந்தபூரணமெய்ஞ்ஞானபீடம்- வித்தாரவாகமத்துக்கதிதமான, ஆதாரமூலவன்னியமர்ந்தபீட - மாநந்தநடநசபையைந்துங்காப்பாம். (௭)

ஐந்துருவாயுடலெடுத்தவாறின்கூறு - மசடில்லாத்தேகமென்சாணுத்துமக்கூறும், வித்துதித்துச்சடமெடுத்தநாதக்கூறும்-விற்பனமாய்க்கடமுதித்தகாயக்கூறும், தந்திரமாய்நீர்க்குமிழி யானகூறுந்-தத்துவந்தொண்ணூற்றாறுசைலக்கூறும், இந்திரியசுக்லசுரோணிதத்தின்கூறு-மியம்புதற்குத்தசநாடியியல்புகாப்பாம் (௮)

தெசநாடிசுவாசமதிஞ்செனித்தவாறுஞ்- செகதலத்திலெனைப்பழித்தசெப்திவாறும், அசைவதிருந்தாக்கையழியாதவாறு-மடிநடுவுமுடிவானகற்பவாறும், பசசந்தமண்ணீறப்புவவொடுத்தவாறும், பஞ்சபக்ஷியஞ்சுநிலைத்திருந்தவாறும், இசையுந்தசதிட்சைமதி ரவியின்வாறு-மிராஜயோகத்தினருள்காப்புத்தானே. (௯)

யோகாதியோகநிலைத்திருந்தபோக்கு-முற்பனமாங்கற்பமுண்டுசாகாப்போக்கும், வேகாததலையுமதிரவியின்போக்கும். வெண்சா

னாகருநெல்லிவிதித்தபோக்கும், போகாப்புனலுஞ்சவுக்காரப்பூனீர்போக்கும்-பூதலமெல்லாமகிழும்பொருளின்போக்கும், ஆகாதமனிதர்களையகற்றும்போக்கு- மசடில்லாமாதுரசகுளிகைகாப்பாம்()

குளிகைரசமாதுகற்பக்குகையின்மூலங்-குருபூசைகுண்டலியின்வாசிமூலம், வழியறியுமவிழ்தமொடுநோய்கள்தீர-வழலைடுப்புவயித்தியமுங்கிருதலேகியம், விழிமடவாளம்பிகைப்பெண் ணருளினாலே - விவேகமணிமாத்திரையும்பஸ்பந்தானும், தெளிவுபெறுஞ்சுன்னமொடு செந்தூரங்கள் - திராவகமுஞ்செயநீருஞ்சென்னிகாப்பாம். (௰௧)

சென்னிவளர்சிவசிங்காதனத்தின்மேவுஞ் - சிதம்பரமாநடநசபைசித்திரகூடம், வன்னிமதிப்பிரகாசகமலபீட - மதுரவின்பவமிர்தசர்வாணிபீடம், உன்னதமாய்க்கன்னியெனக்கமிர்தமூட்டி - புயிருமுடல்நிலைத்திட வுபாயஞ்சொன்னாள், இன்னிமித்தம்பொருத்தமெனக்களித்தஞ்ஞான - விருளகற்றிப் பானரச மீந்தாள்காப்பாம். (௰௨)

வேறு.

இருள்தனையகற்றுஞ்சோதியிசபரவொளியேபோற்றி
அருள்தரஞானதேசியகத்தீசரருளினாலே
திருவுருத்தவளவாணிசிரோமணிக்கமலத்தன்னில்
அருமலர்பொழியுஞானவமிர்தசெந்தமிழைச்சொல்வாம். (௰௩)

நர்தியொளிப்பிரகாசவட்டத்துள்ளே - நற்கமலமாயிரத்தெட்டிதழைப்போற்றி, உத்திநிலையறிந்ததிருமூலர்பாத - முகமையுள்ளகாளாங்கிப்போகர்பாதம், சிந்தையுள்ளமகிழ்ந்தசட்டைமுனியின்பாதஞ்- சிவசமயஞ்சண்டகோரக்கர்பாதம், அந்திபகலறிந்தவிடைக்காடர்பாத-மருளுஞ்சகநாதர்பதமர்ச்சித்தேனே. (௰௪)

மதியிருந்துகுமுறிவிளையாடும்வீடு - மகத்தானசெங்கதிரோன்மகிழ்ந்தவீடு, பதியிருந்துவிளையாடுமூலவீடு-பத்திதருஞ்சித்திதரும்பரமவீடு, கதிபெறவுநாற்சதிரமேவுநின்ற-துலங்குமொழிக்கணபதிவல்லபையைப்போற்றி, நிதிபெறவுமெளனமயின்றகுருவின்பாதநெகிழாமலனுதினமுங்காப்பத்தானே. (௰௫)

திருவிருந்துகணமெலாமாடும்வீடு-சிறந்தசத்திவல்லபைதன்கணவனுன,மருவிருந்துகொஞ்சுதமிழ்நாவின்மேவு-மகிழ்ந்தமதகரியினிருதாளைப்போற்றி, கருவிருந்தபெருவீடுதாண்டியப்பூரல் - கலகுளிரநின்றுநடுவணையிலேறி, மருவியுயர்நாதவிந்துஆயிபாதம்-வணங்கியிந்தநூல்வசையைப்புகழ்வேனுண்டே. (௰௬)

தந்தைதாய்கருவதனி லுதித்தவாறுந்-தாரணியில்கருத்திரண்டுபிறந்தவாறும், அந்தமுடன்சாதிகுலம்வகுத்தவாறு-மவனிதனிற்பெரியோர்களறிந்தவாறும்,சிந்தைதனிலஞ்செழுத்தைப்போற்றிசெய்துசெப்புகிறேனிந்நூலையிகழவேண்டாம், தந்திரமாமுக்கோணந்தனில்நின்ற-தந்திமுகன்கமலபதங்காப்புத்தானே. (௰௭)

கதிரொத்தவிடந்தனிலேயிலகுஞ்சோதி- கனகரத்தினமிலகுதிருமண்டபத்தில்,மதியொத்துநின்றிலகுஞ்சுவாதிஷ்டானம்-வளர்ந்தவிதழிம்மூன்றுமங்குலத்தில்,நிகரொத்தபிரமன்சரஸ்பதியின்பாத-நினைந்தருகித்தாளிணையைப்போற்றிசெய்து,உதிரத்தில்சுக்கிலந்தான்வந்தவாறு-மோரெழுத்தாய்நாதவிந்தமைத்தவாறே. (௰௮)

சொல்லரிதுமந்திரத்துக்கெட்டாவீடு-சோதிமணிபூரகத்திலமர்ந்தமூர்த்தி, வெல்லரிதநாபியதின்கமலத்துள்ளே-விரைந்தவிதழீரைஞ்சுபத்துமேலும், வல்லபமாய்நின்றிலங்குமாலின்தேவி-வளர்ந்தசபைத்திருமாலைவணங்கிப்போற்றித், தொல்லுலகிலுள்ளபெரியோர்கள்பாதந்-துதித்திந்நூல்விளம்புகிறேனென்றேகேளீர். (௰௯)

வட்டமிட்டசதுஷ்கோணப்பாரின்மேலும் - வளர்ந்தவிதழீராறுமங்குலத்தில், திட்டமிட்டவனாகதத்தில்வீற்றிருந்த-சிறந்தருளுமுருத்திரனுருத்திரியைப்போற்றி, வெட்டவெளிவேதமறை நான்கும்மாதும்-வேதமெல்லாந்திருநீறுயானவாறும், அஷ்டதிசையறிந்துணர்ந்தபெரியோர்பாத-மைம்பத்தோரட்சரமுங்காப்புத்தானே (

ஆறுகொண்டவம்பலத்தினின்றசோதி-யம்பரமாந்தற்பரத்தையேறிநித்தம், வீறுகொண்டவறுகோணவீட்டின்மேலும்-விளங்குமிதழ்பதினாறுமேவுமிடம், பேறுபெற்றமயேசன்மயேஸ்வரியுமங்கே-பேணியவரிருவர்பதக்கமலம்போற்றி,பாரிலுள்ளவேதமறியாமல்நின்ற-பழம்பொருளைப்பாடுகிறேனென்றேகேளே. (௨௧)

காலைவட்டமாலைவட்டமாகிநின்ற-கதிர்மனையிற்கருதிமுனையாடுஞ்சோதி, நீலவட்டங்கொண்டெழுந்துகலையென்றுலகும்-நின்றிலங்குமாக்கினையிலிதழுமூன்று,ஞாலமதிலாதியந்தரூபமான-நற்கமலமாயிரத்தெட்டிதழின்மேலும், ஆலவிடமுண்டசதாசிவனைப்போற்றி-யம்பிகையின்கமலபதமாச்சித்தேனே. (௨௨)

திரைகடந்துதிரைக்குமேற் பெரும்பாழ்தாண்டி - சிறந்தசாசாக்காலும் வேகாத்தலையுந்தாண்டி, மறைபுகுந்துவோதுகின்றவேதந்தாண்டி - மதனகலியாணதிருவல்லிமாது, வரையெழுந்த பதினெட்டாங் கோட்டின்மேலு - மாதளம்பூவடிவுமனோன்மனியைப்

போற்றி- கரைகடந்து பறையனென்று தள்ளிவைத்த - கருத்தையி னிச்சொல்லுகிறேனுண்டே கேளே. (உக)

அர்த்தமுள்ள குருவினடிக் கமலம்போற்றி- யன்னைதந்தை யிருவ ருந்தாமனுபோகிக்கத்- தந்திரமாயிரவுதனிலனையும்போது - தாது விந்துநாதமது மெழுந்தபோதில் - எந்தவுயிர்வேதமதை யறிந்த தாண்டே - யிடும்பரொல்லா நீசனென்று தள்ளினர்கள - வந்தவழி போனவழியிரண்டுஞ்சொலவேன்-வகையறியா மாந்தர்களே யறிந் துகொள்வீர். (உச)

பிரமகுலவேதியராய்ப் பிறந்தார்கோடி - பெருமையுள்ள சத் திரியர் பிறந்தார்கோடி, திறமையுள்ள வைசியர்களாய்ப்பிறந்தார் கோடி- தெளிவான சூத்திரராய்ப் பிறந்தார்கோடி, உறவதிகநால் வகையாய்ப் பிறந்தார்கோடி- யுள்ளுணர்ந்துபாராமல்தள்ளினர்க ள், அரனருளாற் சபைநிறைந்த வாண்டைமாரே-யாதியிலே சாதி குல முறைசெய்வேனே. (உரு)

எங்கள்குலஞ் சுக்கிலத்தா லெடுத்தவாறு - மெண்ணரியசுரோ ணிதத்தால் வளர்ந்தவாறும், மங்காத வஞ்செழுத்தால் வந்தவாறு ம் - வகையுடனேயங்குலமோதொண்ணூற்றாறு, சிங்காரமானமன ம் புத்திசித்தம்- செங்கனலாற்கொண்டெழுந்த வாங்காரந்தான், கங் கையணிசங்கரனு ரம்பிகைப்பெண்-கருத்தாலேயெடுத்திருந்தக்காய மாண்டே. (உசு)

கருதிரண்டுகோபமதா யானவாறுங்-கருவியதிலேவளர்ந்து வெழு ந்தவாறும், உருதிரண்டுகால்கைகள் வகுத்தவாறு - முடம்புக்குள் ச தைநிணங்கள் தரித்தவாறும், திருவிருந்தமண்டபங்கள்சமைந்தவா றுஞ்-சிறுபிள்ளையாய்ப்புவியிற் பிறந்தவாறும், அருமையெனுநாதா க்கள்பாதம்போற்றி-யாதியிலேசாதிகுலமுறைப்பேனுண்டே. (உஎ)

பாயிர-முற்றியது.

---

## நூல்.

### தரு

தத்தன தனதனனா-தந்த-னாதனாதனா-தன்னானா.

மூலமு முதலறிந்து-சிவசிவ-முத்திதருஞ்சுழி முனையறிந்து, பா லமூர்த்தாண்டியப்பால்-பரிபூரண-பானுமதியமிர்தபானமுண்டு- நி லமுநிறைந்துநின்ற-மூலமணி-திருமாலின்பொற்கமலச்செயலறிந் து, ஞாலமுங்கடந்துநின்ற-உயர்குல- ஞானவெட்டியானுங்காணும்.

நடுவணைதனிலேறி - சிவசிவ-நாடியகுண்டலிவட்டத்துள்ளே, அடிநடுமுடியறிந்து - சுடரதில் - அனுதினம் வாசிகொண்டமிர்தமுண்டு, படியறிந்திசைநாதம் - சிவசிவ - பத்துமொருமித்துவரும்பழக்கமதால், வடிவுள்ள ஜெகசோதி - கமலமலர் - வந்துபணிந்தவனுன்காணும். (தந்தன) (உக)

வீம்புகள்பேசுகிறீர் - சிவசிவ - வேடிக்கையாயின்பம் விளம்புகிறீர், வேம்புங்கரும்பாமோ - மகத்துகளின் - விற்பனத்தைக் கண்டறியா விழலென்கிறீர்- சாம்பவமூர்த்தியர்க்கே - பட்டமது-ஸ்தாபித்த சாம்புவனுன்காணும்-தீம்புகளறவீர-தெளிந்தவர்கள் - சீர்பாதங்கண்டவர்போல்தெரிசிக்கிறீர். (தந்தன) (ஙஉ)

சபைதனிலுள்ளவர்கள் - ஆண்டையேகேள் - சாதியிலீனனென்னச்சாற்றுகிறீர் - உபையோகமில்லாமலும் - அங்கசுத்தி- புடலறியாச்செபங்க ளோதுகிறீர் - வபையமதாகிய நூல்கள் - வீண்பிலுக்கா - வாசியறியாமலுமே மயங்குகிறீர்-ஔவையார்குலத்தில்வந்தவள்ளுவனெனும் ஆதிபீடமுநான்காணும் (தந்தன) (ஙக)

சிக்கியநூல்பிணைப்பார் - சிவசிவ - சேணியசாதியிலுள்ளபடி - புக்கியநூலிழைக்கும்-பூதலங்களில் - புரிந்தநூலிழைகளைப்பூட்டிவைப்பார்-தக்கியபறையெனவும்-சிவசிவ- சாதிகளில்முதல்சாதியெனு-முக்கியநூல்பிணைக்கும்-மெய்ஞ்ஞானமூர்த்திசாம்புவனுன்காணும்.

அறுந்ததுநூல்பிணைக்கும் - சிவசிவ - அச்செனும்பாவது கண்டமட்டும்-சிறந்ததுநூல்பிணைக்கும்-சிவசிவ - சித்திரச்சாம்புவனுன்காணும்-பறந்தபஞ்சதுநூலா-இழைபிசகா-பனைநூலதுபஞ்சவர்ணமதாய்-நிரந்தரவிசிதமென்னும்-சிவசிவ-நிஷ்டைதனில்மிகுத்தநிர்மலன்காண் (தந்தன) (ஙங)

ஆதியந்தமுங்கடந்து - ஆதாரமூலம்-அலைகடந்தம்பர வெளிதாண்டி - நீதியின்மறைவிளங்கும்.- முப்பாழ்கடந்து - நின்பரிபூரணத்தின்நிலைகடந்து - ஓதுமறைவேதமுந்தாண்டி-பிரகாசவெளி - ஓங்காரரீங்காசனத்திலுறுதியதாச் - சோதியின்நிலையில்நின்று-சுழிமுனையில்-துதித்துதொழுதசாம்புவன்காணும் (தந்தன) (ஙச)

பூணநூல்பிறந்ததெங்கே - சிவசிவ - பின்குடுமியானதுவுமானதெங்கே-வானோர்கள்துதிப்பதெங்கே-மணிமந்திர - வாக்கியசெபதபங்கள்வாழ்க்கையெங்கே-கோனருள்புரிவதெங்கே-யாகசாலைக்- குருக்களாசாரியென்றங்கூறுவதெங்கே-வீணிலேயோதுகின்ற - வேதியர்களே வேதம்பிறந்திடமுன்சொல்வீர்காண் (தந்தன) (ஙரு)

ஒளிவெளிமதிதாண்டி-சிவசிவ-ஒன்பதுவாசலுங்கட்டறுத்து-தெ
ளியவும்பொறிபுலனும் - சிக்கறுத்துச் - சிந்தையகற்றிமனதொருப்
படுத்திப் - பொழியவுமமிர்தரசம் - பொசிக்கவின்பம்-பூசிக்கப்பூசி
க்கஞானம்பூரணமதாய்ச் - சுழிதனிலெழுந்ததொரு-வாசியெனும்-
சோதியைக்கண்டவனும்நான்காணும், தந்தன. (௩௬)

செத்ததோர்மாடெடுப்போம் - சிவசிவ - சுடுகாட்டினிலுங்காத்தி
ருப்போம் - நித்தமுங்கடவுள்தனை - ரவியின்மதி-நேசமுடனேயுரு
திவாசஞ்செய்வோம்-சுத்தவீரசைவமுடன்-வாசிவாவெனும் - தோ
த்திரஞ்செய்தேபுசித்துக்காத்திருப்போம்-கர்த்தனையந்திசந்தி - உச்
சமதிலும்-கருத்தினிலேதினைப்போமாண்டேகேளீர். தந்தன (௩௭)

கட்டையுமடுக்கிக்கொள்வோம்-பிணமதற்கு - காற்பணமுழுத்து
ண்டுவாங்கிக்கொள்வோம் - அட்டவிதப்பரீட்சைகளும் - ஆண்டே
கேளீர் - அங்கசுத்திகளுஞ்செய்ய அடவெடுப்போம் - சுட்டதொரு-
அஸ்திகளுமே-சேதம்வராமல் - துரிதமாய்ப்பொறுக்கியேகூட்டிடு
வோம்-நட்டணைநடைநடப்போம்-ஆதியருள்-நாதனையனுதினமும்
போற்றிசெய்வோம். தந்தன (௩௮)

நால்வகையோனிகளில் - பிறந்துதித்த - நால்வேதஞானமும்வந்
துதித்ததுகாண்-கோலமிதையறியாமல்-உலகருமே- குருடர்கள்வே
றுசெய்தினம்பிரிப்பார் - மாலப்பறையனென்றே- உலகர்கூடி-வா
ய்பிதற்றிவழக்குவாதாடுவர்காண் - பாலரறியாமலென்னைப் - பழித்
துப்-பகடிசெய்துபழித்தனராண்டேகேளீர். தந்தன (௩௯)

பூணநூல்தரித்துக்கொள்வோம் - சிவசிவ - பொறியுமைம்புலனை
யுந்தொழுதுகொள்வோம்-வேணவிருதுகளும் - விசிதமாய்-வெண்
குடைவெண்சாமரமும்பிடித்துக்கொள்வோம் - வானவர்முனிவர்
தொழும்-பொன்விசிறி - மரகதகுண்டலத்தின்கவசங்களும் - ஞான
ப்பிரகாசவொளி - திவ்வியரச-நாதவிந்தார்சனைகளில் நாம்துதிப்
போம். தந்தன (௪௰)

சாதியிலுயர்ந்தவன்காண்-நவரத்ந-சங்கப்பலகையின்மேலிருந்த
வன்காண்-வேதியர்சாஸ்திரிகள்-துதிசெயும்- விருதுபெற்றிடும்வீர
சாம்புவன்காண்-பாதிமதிசடையணிந்தோன்-சிரசில்வளர் - பங்கயச்
செங்கையமிர்தகங்கைநதியில்-சுருதியின்பொற்கமலம்- மதிரவியின்-
கூட்டிடுஞ்சாம்புவனென்போன்காணும். தந்தன (௪௧)

அந்தணர்வேதியர்கள்-என்குலத்தை - அசட்டுப்பறையனென்று
தள்ளினர்காண்-சந்தியுஞ்சடங்கறுத்து-வள்ளுவனென்னைச் - சாம்ப
வமூர்த்தியென்றேதான்தொழுதார்-விந்துவுநாதமுங்கூடி - எங்கெ

க்குமேவும்-எண்பத்துநான்கிலக்ஷவுயிர்க்குமேலதிகமாம். வந்தவழி தனையறியார் - பிர்மகுல - வங்கிஷீவானென்றுமவர் போற்றிசெய் வார். தந்தன (சஉ)

வேதமுநான்காணும்-சிவசிவ-வேதாந்தசாரமுநான்காணும் - மா தவமுனிவர்க்கெல்லாம்-உயர்கின்ற - வள்ளுவசாப்புவனுன்காணும்- பேதாபேதங்களறிய எந்நூல்வகையில் - புரட்டுவுருட்டுகளும்பிரித் துரைப்போம்-ஆதாரமூலமெல்லாம்-அசடில்லாமல்- அவனிதனிலு ரைப்போம்ஆண்டைகேளீர். தந்தன (சஙு)

சத்தியுநான்காணும்-சிவசிவ-சாம்பவமூர்த்தியுநான்காணும் - புத் தியிலதிதவன்காண் - சிவசிவ - புவனமதில்புகழ்திருவள்ளுவன்காண்- சித்தியிலதிதவன்காண்-சிவசிவ-சிங்காதனத்திலிருந்தெங்கெங்குமாய் அத்திமுதலெறும்புகடை-யாவர்களும்-அற்புதமெய்ஞ்ஞானவெட் டியாண்டைகேளீர். தந்தன (சச)

வித்தையிலதிதமெந்தன்-விளங்குந்திரு- வேதாந்தசாரமுண்டுமே தினியில்வாழ் - எத்திசையெல்லாம்புகழும்-இரவிமதி-ஏகாக்ஷரத்தை க்கண்டுசாகாமல்நான்-பத்தியில்முத்திதரும்-உலகமதில்-பறைநூலறி ந்தசாம்புவன்காணும்-முத்தியுமெய்ஞ்ஞானநெறி - முக்கண்ணுடை ய-மும்மூர்த்தியானவர்கள்தம்மூலத்தினுல். தந்தன (சரு)

உதிரமுந்திரண்டதெங்கே-நாதமதி - லோடியேதான்விந்துவும் பாய்ந்ததெங்கே-மதியொளிரவியுமெங்கே-அமிர்தரச - வாரிதிரிமா னவரலாறுமெங்கே-சதிரமும்பிறந்ததெங்கே-உலகுதனில்- சாஸ்திரி யாசாரிகளேதானுரைப்பீர்காண்-அதிதவேதங்களோதும் - சூரியசந் திரர்-அவரவரிருந்தவர்களாண்மையுரைப்பீர். தந்தன (சசா)

கருவதுந்தரித்ததெங்கே-சிவசிவ - காயமாயுதித்துவந்தக் கருத்து மெங்கே-அருவுருவானதெங்கே - அண்டபிண்டங்களாதியுமந்தமுங் கூடியமைத்ததெங்கே-உருவஷநடுவுமெங்கே-ஓங்காரமெனும் - உட லுயிரொடுத்தவிதவுகமையெங்கே - மருவியநால்வேதஞ்சொலும்-ம திகெட்ட-மாந்தர்களிதையறிந்துவகுத்துரைப்பீர். தந்தன (சஎ)

தீர்த்தமுமாடிக்கொள்வீர்-தெளிந்தவர்போல் - செபதபசாஸ்தி ரங்களோதிக்கொள்வீர் - யாத்திராதீர்த்தங்களாடி-நதிகள்தோறும்- அலைந்துஅலைந்துசுற்றிஅலையுகிறீர்-மாற்றியேபிறப்பமென்று- பொ ய்பிரட்டு - வாய்ச்சமர்த்துசாஸ்திரஞ்சொன்மடையர்களே - பாத்தி ராபாத்திரமறியாப்- பாவிகள்தாம் - பாடுபட்டுங்கூரறியாமாடுகள் தாம். தந்தன (சஅ)

அண்டபிண்டம்பிறந்ததெங்கே-சிவசிவ-அந்தணர்முனிவர்வந்துதித்ததெங்கே-பிண்டம்பலவுயிரும்வந்து - பிறந்தவகை - பிரபந்தமிதையறிந்துபேசுவீர்காண்-மண்டலமும்மண்டலஞ்சூழுங் - கதிர்மதியும்- வன்னியும்பிறந்ததெங்கேவானுமெங்கே - விண்டபொருளண்டருங்காணார்-வேதியர்களே-விஸ்வரூபமறிந்துவிளங்குவீரோ ()

சாஸ்திரப்பிறந்ததெங்கே-சிவசிவ-சாதியினூல்வகைகளுமானதெங்கே- கோத்திரம்வகுத்ததெங்கே - சிவசிவ - குருவுடன்சிஷனும்வந்துதித்ததெங்கே - போற்றிடுஞ்சற்குருவுமெங்கே-பொய்க்கருவினல்-பூசையனுஷ்டானமுறைப்பொருளுமெங்கே - சோற்றிலெய்துங்கல்லறியா - சுணங்கர்களே - சொர்ன்னமலரொன்னமயமன்னமலர்காண். தந்தன (௫௰)

அண்டபிண்டபுவனத்துக்கும் - சந்திரனொளி - ஆதித்தனவருருவுமானதெங்கே-சண்டப்பிரசண்டமதாய் மந்திரமோதுஞ் - சவுங்கலைதானறியச்சாற்றிடுவீர்காண் - உண்டதோருணவறியார் - உவர்சத்தின் - உப்புவினுவரகற்றியுண்டுமறியார் - கண்டபொருள்விண்டதறியார்-கல்லுப்புவந்த - காரணத்தைக்கண்டறியாக்கர்மிகளேகேள். தந்தன (௫௧)

நாதவிந்துதானறிய சிவசிவ-நடுவீணைச்சுடரதுவுந்தாண்டியப்பால்- போதரவாயுடலெடுத்த - தத்துவத்தின் - புதுமையைச்சொல்லுகிறேனுண்டையேகேளீர்-மாதர்கள்யோனிதனிலும் - விந்துதித்த - மார்க்கமிதுவாலெடுத்தவாரதிந்திடீர் - ஏதெனவென்றேவிளங்க இப்புவிதனிலிந்திரியமாதவிடாயினமதுகாண். தந்தன (௫௨)

தந்தையுந்தாயுங்கூடி - இருவருஞ் - சருவியேரதிகேளியாடையிலே-விந்தையில்யான்பிறந்த-சரித்திரத்தை - விளம்புவனுண்டேயிந்தமேதினிதனிலும்-உந்தியின்கமலமதி-லுதித்தவித - முற்பனமதாகியதோர்கற்பனைசொல்வேன் - சந்தேகங்கள்தீர்ந்துவிடும் - மாதாபிதாவின் - சங்கைகளறியவிந்நூல்சாக்ஷிபிதுகாண். தந்தன (௫௩)

விருத்தம்.

சோதிமதிசுடரொளியாய் தரித்தவாறுஞ் சடருருவாய் நாதவிந்துதோன்றும்வாறும், நீதியில்லாப்பாழ்வீட்டி னிலைத்தவாறு நெல்லியதின் கனியதுபோல்திரண்டவாறுங், கோதிலாக்கனியெனவே பழுத்தவாறுங் குழவியெனப்புவிதனிலேபிறந்தவாறும், ஆதியிலே கருவூரில்குடியிருந்து அறிவாலேபுவியில்வந்தமைத்தேனுண்டே ()

தன்னையினிதானறியார்தலமுங்காணார் தான்பிறந்தசரித்திரமுந் தடமுங்காணார், இன்னதென்றுவேதமறைவழியுங்காணா ரிம்பரொ

லாம் வாய்மதத்தாலிகழ்ச்சிசொல்வார், பின்னையொருபொருளறி யார்தவத்தைக்காணார், பிதற்றுகின்றபேயர்கள்தான்பெருமைபேசி என்னைத்தான்பறையனென்றுதள்ளினார்க, ளென்பிறப்பைச்சபைத னிலேயியம்புவேனே. (ருரு)

தில்லையெனுமம்பரமாங்கமலபீடஞ் சிறந்தவிந்துநாதமதில்செ னித்தவாறும், வல்லவர்கள்போற்றுந்திருமண்டபத்தில் வழிகடந்து ஆறுதலந்தாண்டியப்பால், சொல்லரியமுக்கோண வீடுந்தாண்டி சோதிமதிநடுவணைமுப்பாழுந்தாண்டி, எல்லையெனுமூலமதினாதவி ந்து இன்பமுடனுதித்தவகையினிசொல்வேனே. (ருசு)

மடைதிறந்துநாதவிந்துவந்தவாறு மாறியிருகலைபிரிந்துவளர்ந் தவாறும், திடமுடனேபதின்மூன்றுங்கோட்டின்மேலுஞ் செங்கதி போலவும்வந்துதித்தவாறும், உடலெடுத்துஆவியதிலுதித்தவாறு மூமையெனற வெழுத்ததனிலுயர்ந்தவாறும், இடைநடுவேயென்னை ப்பறையனென்றவாறு மென்னுடலையெடுத்தவகை யினஞ்சொல் வேனே. (ருஎ)

ஆதியிலே கருவூரு நாட்டுக்குள்ளே அம்பரமாஞ் சிற்பரத்துப் பெரும்பாழுள்ளே, வீதியிலேசிறந்தசிவநாதவிந்து வெளிகடந்து ஆயிரத்தெட்டிதழிற்பொங்கி, சோதியிலுஞ்சுழிமுனையாய்தோய்ந் தபின்பு சுக்கிலமுஞ்சுரோணிதத்தா லெடுத்தபாண்டம், சாதியிலு மென்னைப்பறையனென்றேசொல்லுஞ் சண்டாளர்க்கிந்நூலைச்சாற் றுவேனே.. (ருஅ)

கால்கரமும்பாதமுதலானவாறுங் கணுவிரலுநகஞ்சதையுந்தரித் தவாறும், விலாக்கொடிதனெலும்புநிணம்வகுத்தவாறு மிரதமொ டுமார்புகழுத்தானவாறும், தோலானதுடைவயிறு தொக்கின்வாறு ந் தொகுத்தநரம்பதுவுஞ்சிடஞ்சூட்டும்வாறும், மாலானமாதர்க ருக்குழியிற்சேர்த்தவயனமிதையின்னதென்றுவகுப்பெனுண்டே()

நாடிநரம்பதுவுதிரநயந்தவாறு நலமானதசவாய்வு செனித்தவா றும், நீடியதோலொலும்புகளு நிகழ்ந்தவாறு நிலையானகருவியெல் லாந்தனித்தவாறும், கூடியதோர்குய்யம்வந்துதித்தவாறுங் குழிப் பரியபஞ்சகர்த்தாள்குடிலவாறும் கூடியதோர்மார்புகளுங்கள்வந்த வாறுஞ் சொல்லுகிறேன்விவரமினியாண்டேகேளே. (சுய)

சிறுகுடலுந்தொந்திவயிறானவாறுஞ் சிறந்தபொறியதிற்கலந்து நின்றவாறும், பெருங்குடலுமொருபுறமாய்ப்பிரிந்தவாறும் பேர் பெரியவிரல்குலைசமைந்தவாறும், மறுமடலாயிரல் நுனையிரண் டு

ங்கூடி-வளர்ந்ததுவுஞ்சாதகமாய்மகிழ்ந்தவாறும் . உருவுடனேசெ விநாசியுதடுநாக்கு வுகமையுடனெடுத்தவகையுளாப்பேறுண்டே ()

தரு.

தந்தனதனதனனு-தானதன தந்தனதனதன-தானதனனு.

தந்தையுடனேயென அ - தாயுமிருவர்- சரசவுல்லாசலீலையாடை யிலே மந்திரமதாகவிந்து- நாதமுங்கூடி - வருகிறவழிசொல்வேனு ங்டேயிதுகாண் - இந்திரசாதிலிங்க-முலகுக்கெல்லா - மேகபரநா தவிந்துயாகமதாகி-வந்விதங்கோசபிச - பிரபஞ்சமதாய் - வாய்த்த விவ்விதமூலகில்வகுத்தனர்காண். தந்தன (௬௨)

ஆவிடையார்கோயிலிலே,யமைத்தகுறி - ஆசரவாகவேசேர்ந் துமாதர்களினால்-மேவியதோர்நாதவிந்து வெகுவிசித விற்பனைய றியவொருகற்பனைசொல்வேன் - பாவிகளிதையறியார் - கல்லுகள்த னின்-பாவனையொப்பாகவுமேதாவிதஞ்செய்தார்- ஆவியென்றுமறி யாமல்-செலவழிய- ஆத்துமலிங்கமதனைப்பார்த்துணராமல் . தந்த

வன்னியும்வாயுவுங்கூடி- உயர்கின்ற - மண்டபமார்க்கத்தின்வீ திதனிலே-உன்னதமாய்நாதவிந்து- உறவாடியுமே ஒருவழியாகவந் துதித்ததுகாண்- மூன்னிலையாச்சுடரதனின் மூலவன்னி முப்பொ ருளுஞ்சேர்த்துவொருவுற்பனமதாய் - சென்னிதனில்வளரியல்பா ம் நாதமெனுஞ்-சித்திரப்பூஞ்சாவடியின்மத்திபத்திலே. தந்த (௬௪)

வருகிறவழியதனில்- நவரத்ந - மண்டபத்துக்குள்ளவச் சிரப்பை யதனில்-பெருகியநாதமது-சதாசிவத்தின் - பிரணவமூலப்பிரகாச ப்பேரொளியில் - உருவிமலர்க்கமலம் - போற்றியருள்- உற்பனம ருள்தருங் கற்பகத்தில்வாழ்- அருள்வந் தெய்திடினுந் - திருவடியதி ன்-அனுதினம்பூசித்துமிகவடிபணிந்தேன். தந்தன (௬௫)

போற்றியமண்டபம்விட்டு மறைபவர்தன் - புகழுஞ் சிங்காரமெ னும் புரவிவிட்டு - சாற்றியமயேஸ்பரத்தில்-சம்பிரமத்துடன்-சத் திரத்தில்வந்துசித்திரச்சாவடியினில் - காத்திருந்தேன் திருநடனம்- ரத்நமணி - கனகசபையைக்கண்டு நான்மகிழ்ந்தேன் - பூத்தசெங் கமலமலீ-இங்கிதநாதப் - பொக்கிஷித்தைக் கண்டறிந்து யான்ம கிழ்ந்தேன்காண். தந்தன (௬௬)

தெண்டனிட்டுமண்டபம்விட்டுக் - கரூர்தனில் சித்திரப்பூஞ்சா வடிதன் முகப்பும்விட்டு-தொண்டர்கள்பணியும்ருத்திரன்- திருவடி யை - தொழுதனுதினம்பணிந்துதுதித்துநின்றேன் - அண்டர்கள் போற்றுகின்ற-பிரகாசவெளி - அவிடத்திலேமனதையடக்கியேகா

ன்-கன்றிகளிகூர்ந்துமிக- மதியின்மலர்-சக்கையத்தில்பங்கயக்கன் ஸிங்காசனத்தில், தந்தன (௬௭)

நின்றபதியம்பரம்விட்டு-நிலைபிசகா-நினைவுக்கரியதொருபொறி கடந்து-வேண்டியவரமருளும்-திருமால்திரு-மெல்லடி பணிந்துப தம்வணங்கியபின்-சென்றமூலவாசியைக்கொண்டு- இராசயோகந்-தேசிட்பிரகாசமூலகேசரத்தில்யான் - ஒன்றுதவநெறிபிசகா-மோசித் தவிருள்-ஒடியேமூலாக்கினிநாடிவணங்க. தந்தன (௬௮)

வணங்கியபதிகடந்து-திருநடன-மாடியகூத்தெனுஞ்சபையது கடந்து- இணங்கியபிர்மருத்திரன்-கமலமலர்-இணையடிதொழுதுமே யான்பணிந்தேன் - குணமவரதிசெயமா - மென்றுவுரைக்க கூடு மோ கோடானகோடிமேடானமேட்டி - மணம்விசித மலர்போ றியு-மதிரவியின் - மாமதுரபூபதிகொண்டேமயங்காமல். தந்தன

கொண்டபதிமண்டபம்விட்டுக்-கருவிகளின் - கூடியதிருமுகப்பூ ஞ்சோலையிலே அண்டர்களருள்போற்றங்-கணபதியின் - அடியின ருள்துதித்து அடியில்வந்தேன்-குண்டலிகமலமலர் - மென்மேலவ ந்தன் கோபுரச்சித்திரமதிலின்வாசல்விட்டு- மண்டலஞ்சூழுங்கதிர்-வலமிடைபின்-மலரடிதொழுதுயான்வணங்கிவந்தேன். தந்தன (௭௰)

வந்துதிருமூலத்திலும்-பானுவிருக்கும் - வச்சிரவளர்சதுஷ்கோ ணவாசலிலுஞ் - சுந்தரவிந்திதிலும்வந்து-சிநேகமது - சோதித்துக் கலந்துறவாடிக்கொண்டே-விந்திரபதவிகளெனவே என்றுன்னடை யேகேள் - இங்கிதநாசங்கிதமங்களமதாய் - சந்திரபுஷ்கரணிவரும்-நந்திபிரகாசந்-தாரையதுவேமுழங்குஞ்சாரையைக்கண்டேன். தந்

தூண்டியநாதபுரி - பரிபூரணத்தின்- சுகந்தமலர்க்கமலந் துதித் துக்கொண்டேன் - பூண்டுபொற்பதம்பணிந்தேன் - என்றுன்னடை யேகேள் - பூரகத்தினிலும்வந்து போற்றிசெய்தேன் - வேண்டிய மதிமலர்கொண்-டாராதனைகள் - மிகுத்தவம்பிகாயோகம் விதரணை யாய் - கண்டிபமென்குலறிய - வாசியைக்கொண்டு-கருத்திலிருத்தி க்கண்டதாளாயூதினேனே. தந்தன (௭௨)

வந்துதசநாதவிந்து-சுழிமுனையின்- வாசலின்கருக்குழிதன்விட்டு க்குள்ளே-தந்திரமதாகவேதான்-கருவதனில்- சங்கற்பமில்லாமல்கல ந்துறைந்ததுகாண்-விந்தையெனுநாதவிந்து- சையோகந்தனில் வி ற்பனம்போலவுமெய்துமுற்பனமதாய் - சுந்தரசுக்கிலசுரோணித-மிரண்டுங்கூடி - சொற்பனம்போலுமுதித்தருட்சமிதுகாண். தத்

வெண்பா.

உள்ளொளியாஞ் செந்தணலி லுற்பனமாஞ்சொற்பனத்தில்
வள்ளலெனு நாதவிந்து வந்ததுகாண்-தெள்ளியதோர்
கத்தரிக்கோன்மாறல் கநககசபைவீட்டில்
வித்தாய் முளைத்ததுகாண் விந்து. (௭௪)

நகார மகாரமுடனுடுஞ் சிகாரமதாய்
வகாரமிரு காலாய் வளர்ந்ததுகாண்-யகாரமது
அஞ்சறிவாயநின்றபஞ்சப்பெரும்பூத
மஞ்சும் வளர்ந்ததுகா ணுண்டே. (௭௫)

கொச்சகம்.

ஓராறுமேலாறு முற்றபெருந்துறைதாண்டி
சீரார்புகழவருந்தெய்வப்பதிதாண்டி
காரார்மதகளிறுகன்னி திருவீட்டில்
போராய்கருவுதித்துப் பேசியிருந்தேன்காண். (௭௬)

ஆதிக்கருவூரி லங்கேகுடியிருந்து
நீதியந்தநாட்டில்வந்து நெஞ்சறிந்துநேசமதாய்
சாதிகுலந்தவிர்ந்து தலமுஞ்சுழிவீடுவிட்டு
சோதிமதிநின்றிலங்குஞ் சுடர்வீட்டில்வந்திருந்தேன்.

விருத்தம்.

விந்தெனவுநாதம்வந்தவாறுஞ் சொன்னேன் வெளிகடந்துவந்த வகைவிவரஞ்சொன்னேன், அந்தவிடைபின்கலையில் மாறல்சொன்னே னதுகடந்துசுழிமுனையையறியச்சொன்னேன், விந்தைமபலாசையது மொழியச்சொன்னேன் விட்டகுறைதொட்டகுறைவிபரஞ்சொன்னேன், அந்ததிசையதிசயமு மகற்றச்சொன்னே னருள்சொன்னேன் பொருள்சொன்னே னறிவுள்ளோர்க்கே (௭௮)

ஓங்காரசத்தமுதித் தணர்ந்துநிற்கு முன்னியதோ நகாரமதும் வளர்ந்துநிற்கும், நீங்காதவகாரமது முயர்ந்துநிற்கு நிலையானசிகாரமதுமேலேநிற்கும், பாங்கான அகாரமதைக்காத்துநிற்கும் பதிவானவுகாரமது மேலேநிற்கும், ஆங்காரமானவஞ்சுபஞ்சபூதமப்படியே பஞ்சுருவாயாச்சுதாண்டே. (௭௯)

சத்தமதுபிருதிவு மேலேநிற்குந் தாங்கிநின்ற பரிசமது வப்புமேலாம், பத்திதரும்ரூபமது சிகாரமேலாம் பாங்கான ரசமதுவும் வகாரமேலாம், சித்தமகிழ்ந்ததுவுமொரு யகாரமேலாஞ் சீர்பெறவே காயமெனுந் திரண்டேயாச்சு, வெற்றிதருங்கருவியொருதொண்ணூற்றாறு விளைந்துறைந்தே யுதிரமதில்பிறந்துதாண்டே (௮௰

நட்டுவைத்தவெலும்பு கால்துண்டுநாலு நலமானகையெலும்பு துண்டுநாலு; ஒட்டிவைத்த பழுவெலும்புமுபத்திரண்டு வன்னதமாந்தண்டுபதினறுகண்டம் - மட்டுவைத்தவெலும்புமுச்சாணதற்குமேலே - வளமான நுறுக்கெலும்புவாயிரந்தான்; சுட்டலந்தபாண்டமீதெடுத்தநேர்மை - தொகையெல்லாஞ்சபைதனிலே சொல்வேணுண்டே. (அக)

விரனகையெலும்புபிருதிவின்கூறும் - விதமானவுண்ணீறுபிரமன்கூறும், பேரானதசைநாடிவாய்வுபத்தும் - பிலமானநரம்பெல்லாமாலின்கூறும், கூறனவுதிரமெல்லாஞ்சத்திகூறுங்- கூடிநின்றவெலும்பெல்லாம்ருத்திரன்கூறும், சீரானதிணத்தோடு மச்சைசவ்வுஞ் - சிறந்தருளுமயேஸ்பரத்தின்கூறுமாண்டே. (அஉ)

ஆதாரமானபரநாதவிந்து - வாதிசதாசிவல்கூறு மாண்டேகேளீர், பாதாரமுடியளவுக் கணக்கதாகப் - பாலித்துவிவரமதாய்ப்பகரயானும், வேதாகமத்தில்நின்று நடனஞ்செய்யும் - விந்துநாதத்தின்செயல்விவரமாக, நாதாக்கள்கமலபதந் துதித்துயானும் - நவிலவுமேயான்கண்டநடத்தைண்தயாடே. (அ௩)

முத்திதருமூலத்திலட்சரமேநாலு - மூதலானசுவாதிஷ்டானமெமூத்தாருகும், பத்திதரும்பூரகத்தி லெழுத்தும்பத்து - பாங்கானவனுகதத்திலெழுத்திராறும், சித்திரமாம்விசுத்திதனிலெழுத்தி ரெட்டாஞ் - சிறந்தவாக்கினையி லெழுத்திரண்டுமாகும், சத்தியெனுமம்பரத்திலெழுத்தொன்றுச்சு - சார்வாகுமைம்பத்தோரட்சரங் காணுண்டே. (அச)

மும்மலமுந்தரித்ததொரு வாசலொன்று - முடிகாணுலிங்கமொருவாசலொன்று, நன்மையறுசுவையறிந்தவாசலொன்று- நலமானகேள்விகொண்ட வாசலொன்று, வண்மையுள்ளவாசமறி வாசல்ரெண்டு - வளமானரூபமறிவாசல்ரெண்டு, அன்னமெனுமம்பிகைப்பெண்ணருளினலே - யறிவாலேயெடுத்ததிந்தக்காயமாண்டே (அரு)

கொச்சகம்.

வட்டமதிலேறிவளர் மாமதியைத்தாண்டியொரு
திட்டவளேபோட்டுநவ சித்திரமணிவாசலிலே
முட்டிநின்றகம்பமுனே முதற்சுழிவீட்டினிலே
ஒட்டியதுவளர்ந்து வொருமலராய்ப்பூத்ததுகாண். (அசு)

பூவிருக்கப்பிஞ்சாகி பூவிலரும்பாகியுமே
மாவிருக்கத்தேனுகி வந்துசிறுவீட்டில்
மேவிருக்கவம்பரத்தே வேரோடிதூராகி
யாவருக்குமிங்கிதமா யரும்பாகிநின்றதுகாண். (அஎ)

வெண்பா.

வடிவுகொண்டவள்ளையுமாய்மந்திரஞ்சேர்நாதமுமாய்
முடிவுகண்டுமூலமுளைத்தநுகாண்—வடிவதுவாய்
கால்வாங்கிவட்டமிட்டு கனகதிருவிட்டில்
மேல்வாங்கிநின்றதுகாண்வித்து. (௮௮)

விருத்தம்.

மாகயனும்பிரகாசமதியதாகும்-வாழும்வளருத்திரனுமுருவதாகும், சேலானமயேஸ்பரனுமுணர்வதாகுஞ்-செப்பரியசதாசிவனுங்குருவதாகும், காலானநாடியொருகைகாலாகுங்-கதிர்மதியால்வளர்ந்தசத்திக்கருவதாகும், வேலானவிழிமடவாளுந்திக்குள்ளே- விளைகின்றகருவியெல்லாம்விதிப்பேனுண்டே. (௮௯)

எட்டுத்தூணுட்டியொரு விட்டம்போட்டு - எழுந்ததின்மேலருகுவளையொன்றாய்க்கூட்டி, மட்டற்றமோட்டின்வளை யொன்றுநாட்டி - வளமானதுண்டுவளைரண்டும்போட்டு, கட்டாகக்கையகத்திற்வளைத்துக்கொண்டு-கனமானவரிச்சல்விலாக்கொடியுமாக்கி,முட்கட்முட்டநின்றகம்பத்துமேலாய் முகப்புடனேசிங்காரவீடுமாச்சேயின் பத்தியுடன்விரலுமிரு பதுவேயாச்சு - பதிந்தநகமதுவுமேயாச்சு,வெற்றியுள்ளரோமமதுமநேகமாச்சு - விதமானவீநாட்டிண்சாணதுவேயாச்சு, அத்திபுரமதுவாச்சுவெளியுமாச்சு-வஞ்ஞெருந் தொண்ணூற்றூரதிலேயாச்சு, சத்திவாலாம்பிகைப்பெண்ணுக்கயிறுயாச்சு-சார்வானகருவியெல்லாமமைந்ததாண்டே. (௯௦)

வெண்பா.

அங்குலமுந்தத்துவமுமதிலேவளர்ந்தவகை
இங்கிதமாயானுனாப்பேனீசனே—எங்கள்குலம்
வந்துதத்தமூலம்வளர்ந்தவுயிர்போம்பொழுது
வெந்துதநதமூலவெளி. (௯௧)

கலித்துறை.

கதிரோசிறநததுகார்கொண்டவட்டக்கனகிரிமேன்
மதுரம்பொழிநதுவழியேநடநதுயர்வாசலிலே
உதிரநதிரண்டுவுடலாகியேவநதவுண்மையெல்லாஞ்
சதிரம்பிறநதவிவரஞ்சபைநின்றசாற்றவனே. (௯௨)

நாடித்திருநதுயர்நாதாநதவிரதுளநாட்டத்திலே
கூடிக்கலைநதவிருகாலைவாங்கிக்கொடிமுடிமேல்
ஆடித்திருநதுவளவற்றுநின்றவழையதுக்கு
ளோடிக்கலநதுவொருமலராகியுதித்ததுவே. (௯௩)

விருத்தம்.

நாற்சதிரமேலும்வளர்கணேசனுக்கு-நல்லருளைத்தநதருளும்

பிர்மாவுக்கும், பாற்கடலிற்பள்ளிகொண்டதிருமாலுக்கும்- பன்னி
ரண்டின்மேலுநின்றருத்திரற்கும், மேற்சதிரமானமயேஸ் பரனு
ருக்கும்- விநதுவதினின்றிலங்குஞ்சதாசிவற்கும், தீர்க்கமுடனவரவ
ர்க்குக்கட்டும்வீடு-செப்புகிறேன்ஜெகசோதிசெயல்தானுண்டே.()
நாதமென்றஞ்செகமெல்லாநின்றதாதா-நல்வினையுநதீவினையு
மாண்டமூர்த்தி, வேதமென்றகடலுக்குமெட்டாநின்ற - வெளிகட
நதுஆறுதலநதாண்டியப்பால், பாதமடிமுடியாகிநின்றசோதி - ப
தினுலுலோகமதுக்கொருவனுன, ஞதமதுவானதிரு மூலநதன்னில்-
சுரூபமாய்நின்றவகைசொல்வேனுண்டே. (௧௬)

தரு.

வீடுகட்டிக்கொண்டேன்-நானொருகு-வீடுகட்டிக்கொண்டேன்.

வீடுகட்டினேன்விண்ணொடுமண்ணையுங்-கூறதாச்சுக்குறியிதுர
ண்டினுல், பாடுபட்டுச்சலத்தைத்தெளித்துடன் பற்றிநெருப்பையு
ங்காற்றையுஞ்சேர்த்துமே - கூடுண்டானகுறிமண்ணுநதண்ணீருந்
திண்ட்டிப்பிசைநதுறவாட்டிப்நதமுடன் - நீடுலகம்புகழாவியதுக்கு
லவுசேலைக்கவெண்சாணுடல் நேத்தியைப்பார்த்திரும். வீடு (௧௭)

முத்சுமுழங்கொண்டிருகாலைநாட்டிச் சதிராகவட்டப் பலகையுஞ்
மூத்தாத்தி, உச்சிதமாகவொருமரநாட்டியே உள்ளேபமூவரிச்சலுங்
வனுகதத்துடன், முச்சுடர்வன்னிக்குழையொன்றுநாட்டியே முட்
டாஞ் - இணட்டுமுனையதுவாகிப்பின், மச்சுகூடுகட்டவகை யறியாதாண்
பாத்திசெழ்நதுடனுதாரவாசியைக்கொண்டுமே. வீடு (௧அ)

ண்டே. டுப்பலகையுமுட்டுப்பலகையு ஒங்கியசிங்காரமோட்டுவளை
வட்டத்திருகாணிவிட்டத்தின்மேல்நின்று மாயாமல்கைமா
மும்மல் மல்நாட்டியே, முட்டுக்கால்வட்டமூக் காணியைப்பூட்டி
ருவாசலெ மல்தச்சு முயற்சியதாகவும், நட்டுகாலாணிகள் முட்டியே
கேள்விசெ - நாதவிநதாலும்வேதாந்தவீடாச்சுது. வீடு (௧௯)
ண்டு - மரநாலுகணக்காகச்சேர்த்துக் காலாணிகொண்டுமே லாணி
பெண்ண ட்டியே, மெய்யுறவாகவும்போதிக்கையொண்டேட்டி வேடிக்கை
லுகொடியுநதிருப்பியே, ஐய்யநடுமூலக்கம்பமதாகிய சூக்ஷ்க்
வட்ட ல்நாட்டிச்சுகாதீதமாகவும், மையத்திலேசுருள்மேருவைக்கூட்டி-
திட் ப்பின் வச்சிரப்பலகையொண்டச்சுழல்மூட்டியே. வீடு (௨௦)
பு நகாரமகாரமிரண்டையுஞ்சேர்த்து நடுவேசதுஷ்கோணவீட்
ஒ டையுங்கட்டிச், சிகாரவகாரயகாரமதுகொண்டுச் சித்திரச்சாவடிவி
ஸ்தாரமாகவும், அகாரமதுக்குள்ளேயையுமென்றட்சரம் அவ்வெ
மூத்தாலேயகண்டசராசரம், உகாரமதுக்குளுயர்நத கிலியெனும்
உவ்வெழுத்தாலுமுதித்தசவ்வானதம். வீடுகட் (௨௧)

வஞ்சகமானதோரஞ்சுபெரும்பூதம்பஞ்சரிவாகவுங்குஞ்சரவீ
ட்டினில், அஞ்செழுத்துள்வளலாய்பத்தோரட்சரம் ஆநநதமாக

வலங்காரமாளிகை, கொஞ்சுவிளையாடும்ரஞ்சிதவீட்டினில் நெஞ்ச தியுங்கமலாலயமைம்பொறி - செஞ்சொன்மொருசிவசிங்காதனத்தி னில் கஞ்சமலராயிரத்தெட்டிதழினல். வீடுகட் (௩௨)

நாலுமுழத்திலுங்காலவளர்த்திடும்ப நாட்டியேசக்கரம்பூட்டியே வைத்துடன், மேலுமீனாதனுடன்தாதுவினுடியால் வீட்டுக்குஆக் கையைப்பூட்டிவருநதியே, மாலுநடுவணைகாலுமடியனும் பாலும திவளர்மேலுஞ்சுடரினல், மூலவன்னிச்சுழி மூவரிருப்பிடம் வாலை குண்டலிதன்மாளிகையாச்சுது. வீடுகட் (௩௩)

நாட்டித்தசவாய்வுமீனாதனுஞ்சேர்த்துமே நாடியஷ்டதிசையுந லமாகப்பூட்டியே, வீட்டுக்குவாசலொன்பதுமுண்டாக்கியே வே டிக்கையாகவுநாடிநரம்பாலே, காட்டியசுக்கிலசுரோணிதத்தாலேக ருவியெனுங்கரணாதிகள்சூழ்நதிடில், ஆட்டியமுட்டுமுடக்குக்கனு வுக ளாக்கைப்பலப்படநாக்குவுண்ணாக்குடன். வீடுகட் (௩௪)

சிங்காரமானவரமண்ணையஞ்சையுஞ் சிற்றம்பலத்துடன்பேரம்ப லங்களும், கங்கைநதிகளுநதொண்ணூற்றறுவர் கலநதேயிருக்குங் கனகசபையெனும், அங்கங்குறைவுபடாமலரண்மனை அச்சுடுகட் டியேமச்சுமேஆலயம், எங்கும்பிரகாசிக்குமிநதிரியவீடு இடையின் கலைசுழியேகாக்ஷரத்தினல். வீடுகட் (௩௫)

ஐநதுபுலனையதிவாகக்கூட்டியே ஆதாரமாறும்வளைதனைநாட்டி யே, கைநதுமதசுழிகற்பத்தையூட்டியே கால்கொண்டுநின்றொரு மேல்கொண்டுவாங்கியே, பைநதமிழ்சூல்திரு நாடித்திசைக்கயிறு பாங்குடன்கட்டிக்கயிறுமூன்றும்பூட்டி,ஐநதுபூதத்தைக்கொண்டா க்கையிலாடிட ஆறாருண்டாக்கியநேகவிசிதமாய். வீடுகட் (௩௬)

சுற்றிமதில்களுமாரச்சுவருடன் தூண்டுகளாகியதண்டிகைக் கம்பு கள், பத்தியாய்நின்றதோர்சித்திரச்சாவடி பார்க்கிறபேர்க்கெலாஞ் சீர்க்கலங்காரமாய், முத்திதருஞ்சிவசித்திரமண்டப மோட்டுவளை யுநரம்பாலிறுக்கியே, சத்தியெனுநவரத்நக்கதவுடன் சநதிரிவாச லினுன்னதமாகவே. வீடுகட் (௩௭)

நவ்வையுமவ்வையும் ரண்டையுஞ்சேர்த்து நலமானஅவ்வையும் வவ்வையுங்கூட்டியே, சிவ்வையுஞ்சேர்த்துடனுசாரிகையில் திடமா யெண்சாணுடல்தேகமதாகவே, அவ்வதுக்குள்ளே யாதாரமாச்சுது அம்பிகைப்பெண்ணளவாலேவீடாச்சுது, உவ்வதுக்குள்ளேயுடலு முண்டாச்சுது ஓங்காரத்துக்குள்ளேயுயிர்வநதுலாவுது(வீடுக)(௩௮)

திங்களொன்றுனமின் மூங்கின்முளைபோல் திரண்டுருண்டேகனி யாகுங்கருவுரு, சிங்காரமானதோர்திங்களிரண்டினில் சேர்ந்துகலந் ததுபாலடைபோலவும் இங்கிதசுக்கிலசுரோணிதமாகிய இந்திரிய வச்சிரவின்ப்வீடாமதில், தங்கியநாதவிந்தாலேசமைந்தச் சடமது ன்வாறினைச்சாற்றவனுண்டேகேள். வீடுகட் (௩௯)

விருத்தம்.

மூலமதில்வீடொன்றமுடிந்ததாண்டே - முச்சந்திவீதியதும்பு
றப்பாய்வைத்து, சீலமுள்ளபிரமனுக்கும்வீடொன்றாச்சு - சிறந்த
ருளுந்திருமால்தன்வீடொன்றாச்சு, ஞாலமதில்ருத்திரன்வீடொன்
றயாச்சு - நலமானமயேஸ்பரன்றன்வீடொன்றாச்சு, ஆலவிடமு
ண்டசதாசிவனுருக்கும்-அரண்மனையுமொன்றாச்சுஆண்டேகேளே(.)
மருவுயர்த்தவதனத்திநாதசத்தி-வடிவானமரகதப்பெண்மாதுவா
லை, திரிபுரத்துக்கொருபுறமாயிலகுஞ்சோதி - சிற்பரத்திதற்பரத்தி
சிறுபெண்ணுத்தாள், சுரிமுகத்திகனதனத்திதுடியிடைச்சி- துலங்கு
மிரத்நமானதொருசோதிமாது, அருமறைச்சியம்பரத்தி யம்பிகைக்
கு - அரண்மனையுமண்டபமுஞ்சமைந்ததாண்டே. (௱௰௧)
குருவுடனேசீஷனுந்தான்வாழ்ந்தவீடு - கூறுனவிந்திரியந்தரித்
தவீடு, அரூபியெனுநாதாக்கள்துதிக்கும்வீடு - அளவற்றவைம்பூத
ம்வாழ்ந்தவீடு, பருவமெனும்ஞானசிவசத்திவீடு - பண்ணுமறைக்
கெட்டாதநாதவீடு, கருவிருந்தஞானவிந்திரியவீடு -கட்டிவைத்தா
ன்திருமால்தன்கயிற்றாலாண்டே. (௱௰௨)
அடிநடுவுமுடியுமொருவெண்சாணீளம்- அங்குலமுந்தொண்ணூ
ற்றாராண்டேகேளீர், கொடியமகாமேருவெனும்வளர்ந்தவீட்டில்-
குடிலமங்குலத்துக்கோர் கருவியாகும், படியானபதினெட்டாங்
கோட்டின்மேலும் - பலபலவாய்க்கருவிகளுமமைத்ததாகில், முடி
சிறந்தஜெகநாதரருளினாலே - முடிந்ததுகாண்பெரும்பரத்தி வீடு
மாண்டே. (௱௰௩)
சரிதையுடன்கிரிகைசிவயோகஞானந் - தன்னையினிசெய்திருக்கு
மாத்தாள்வீடு, வரிசைதந்துவிளையாடுமாதிவீடு - வளமானகருவி
யெல்லாம்வளர்ந்தவீடு, பெரியநரம்பெழுபத்திராயிரத்தில்-பெரு
நாடிபெலத்தநரம்பானதாலே, பரிபூர்ணவம்பிகைப்பெண் ணிரு
ந்தவீடு - பாகமதாயமைத்துமுடிந்தாச்சுதாண்டே. (௱௰௪)
ஒன்பிரண்டுதிங்களினில்கருவுமூறி - யொருமூன்றுதிங்களினில்உரு
பமாகி, கன்றுசதுரஞ்சுவிழுமூன்றில்தானுங் - கருத்துடனேயிடை
நாசிமார்புமாகி, என்றுணாத்தவேழுதிங்களெட்டுக்குள்ளே - யெண்
ணரியநாதவிந்துவுருவேயாச்சு, அண்டபிண்டமகண்டமதாயமைத்
துமேறு - மலங்காரவீடாகச்சமைந்ததாண்டே. (௱௰௫)
ஆக்கையெனுந்தசநாடிநரம்பினாலே - யடிநடுவுமுடியுமாநார
மாகி, தீர்க்கமுள்ளயோனிசித்திரமதிலும்வீடுஞ் - சிவமயத்தினரு
ளாலேயமைத்தவாறு, மேற்கயினியுளுத்ததொரு வுப்புப்பாண்ட-
மிப்படியேசடமதுவாய்வீடுமாச்சு,பார்க்கவொருசிங்காரவிசிதமா
கும்-பன்னிரண்டாங்கோட்டில்வந்துபதிந்ததாண்டே. (௱௰௬)
நாலாச்சுஆறுச்சுவீணாஞ்சாச்சு - நலமானவீராறுமீரொட்டாச்சு,

மேலானவிரண்டாச்சுஇதுக்கப்பாலும் - வெளிகடந்தவொன்றாச்சு வுருவுமாச்சு, காலாச்சுகையாச்சுவயிறுமாச்சு - கட்டிபொருவீடாக ச்சமைந்தவாறு, சிலமுள்ளசிங்காரவிசிதவீட்டில்-சித்திரத்தின்பது மையைப்போற்செனித்ததான்டே. (௬௰௭)

ஆறாதாரவகை-இந்திரியவிவரம்-தரு.

அடையாளஞ்சொல்லுகிறேன் ஆண்டையேகேளீர்
அடையாளஞ்சொல்லுகிறேன்

பிருதிவியப்புவுந்தேய்வுடன்வாயுவும் - பேரானவாகாசமைந்தை யுங்கூட்டிக்-கருத்தில்வளருஞ்சுழிமுனைவீட்டினில்- கண்டிட்புறமாக நின்றது ஆண்டையே-திருவிசமலத்திதழாயிரத்தெட்டு - நிற்குணநிர் மலநேர்மையிதாகையால் - மருமலர்சூழ்திருமாலின்பதிவளர்- மா மதுரக்கனிவாழ்க்கையுமிப்படி. அடை (௬௰௮)

தோத்திரமாவதுவாக்குடன்சட்சுவு - சிங்குவையாக்கிராணமை ந்தையுங்கூட்டி - பாத்திரமானசெவியுமுடம்புகண்- பாங்கானநாக் கதுமுக்குமேயாச்சுது - சத்தபரிசமும்ரூபரசகெந்தஞ்- சார்வாகு மீதொருவைந்துமேயாச்சுது - சித்தமுங்கேள்விசுகதுக்கஞடங்கள் சேர்ந்தவறுசுவைநாவதுமேருசி. அடை (௬௰௯)

சந்தனகெந்தஞ்சவ்வாதுபனிநீர் - சாந்துபுழுகுகளபகஸ்தூரி யும் - சிந்தைமகிழவேகண்டுகளிக்குஞ் - செழுந்திருநாசிசுகதுக்கதித் திரை- பைந்தமிழ்வாக்குடன்பாணியும்பாயுரு பாங்காயுபஸ்தமைந் தாச்சுதுபாகமாய், அந்தமுங்கால்கரபானமுந்தாரணை, பைம்புல னுவதும்லிங்கமிதாண்டையே. அடை (௭௰)

வசனங்கமனந்தானம்விசற்கம், வாழுமேயானந்தமைந்திதுங்கூ டியே, நேசமும்வார்த்தை நடக்கைக்கொடுக்கவும், நீருமலமுமா தாரமீதாச்சுது, நேசமனப்புத்தியாங்காரசித்தமு, நேராயிதுநாலு நின்றுநடக்கையால், ஓசைநினைத்திடும்புத்திவிசாரிக்கு, 'மோங்கார கோபமுஞ்சித்தம்பொறுத்திடும். அடை (௭௰௧)

உருவமுங்கொண்டுவுலகெங்குஞ்சுற்றி, யுமூன்றுவமூன்றுவுணர்ந் ததுவிப்பதும், அறிவொன்றுமூன்றுமேயாகதத்துவமு, மையாறு முப்பதுமெய்யாகக்காட்டியே -கருவில்மைத்ததின்காரணசற்குரு, காட்டியதத்துவக் கட்டளையின்படி, திருவுருஞானசிவசத்தி யம்பி கை, சின்மயசுரூபசிரோமயமாமது. அடை (௭௰௨)

விருத்தம்.

கங்கைபெறுங்கதிர்மதியுந்தரித்தசோதி-கனகரத்தினமாணுடனே மழுவுமேந்தி, பங்கயமாமறுகுதும்பைகொன்றைசூடி-பதினாறுகலை பணிந்தமூலந்தன்னில், திங்களெனும்புவனமெல்லாநிறைந்தசோதி. திரிபுரத்தைக்கனலாகவெரித்தவீசன், செங்கநதியென்றதிருமூலந் தன்னில்-செனித்தெழுந்தகருவியெல்லாஞ்செப்புவேனே. (௭௰௩)

பூதாதியைந்துநின்றபுகழுஞ்சொன்னேன் - டிலைந்தும்விவரமு
தாய்ப்பொறியுஞ்சொன்னேன், சுதானகர்மவிந்திரியஞ் சொன்னேன்
சுகஞானவிந்திரியமைந்துஞ்சொன்னேன், நிதான அகக்கரணநாலு
ஞ்சொன்னேன் - தெளிவானஜெகநாதரருளினாலே, ஆதாரவாய்நின்
றதசவாய்வுஞ்சொன்னே - னதுகடந்துவறிவதற்குவருள்செய்வே
னே. (௱௨௪)

உணவறிந்துநினைவறிந்து வுணர்ச்சிகண்டு - உள்ளறிந்துபுறமறிந்
துஉரிசைகண்டு, மணமறிந்துமதியினின்றமகிழ்ச்சிபெற்று -வசன
மெனுங்கேள்வியதின் வாய்மைகேட்டுக், குணமறியாதாசையினாலழிந்துநின்று - கூர்ந்துமனமெழுந்துவொருகருமஞ்செய்து, நினை
வுதவுருமவொன்றாய்ப் படைத்துநின்றோன் - நிகருடையதத்துவமு
ப்பதுஞ்சொன்னேனே. (௱௨௫)

சொன்னவகைதொகையறிந்துசொல்பேதங்கள் - சொல்லவில்லை
தசநாடிதசவாய்வுந்தான், இன்னமொருவகையறுபத்தாறுஞ்சொல்
ல-விவர்கள்நின்றநிலைசொல்லவீடுஞ்சொல்ல, வின்னம்வராதிவர்கள்
செய்யுந்தொழிலுஞ்சொல்ல - வேதாந்தமறியாதமுடிவுஞ்சொல்ல
அன்னையெனுமம்பிகைப்பெண்ணருளினாலே- யவதரித்துநின்றநிலை
யருள்செய்வேனே. (௱௨௬)

கொச்சகம்.

மருவுதிருபொற்கமலம் வல்லபைதன்வீட்டிலொரு
கருவுருவாயைம்பூதங்கலந்தேயொருபுறமாய்
அருவுருவாய்நாதவிந்து அறுகுநுனிமேற்பனிபோல்
மருவியையம்பத்தோரெழுத்தில் வந்தவகைசொல்வேனே. (௱௨௭)

தாங்கிநின்றமூலமதில் தானுமொருவீடுகட்டி
வாங்கிநின்றுவட்டமிட்டு மாறியிருகாலாக
ஓங்கிமுளைத்ததுகா ணொன்றேகொழுந்தாகி
நீங்காமல்நின்றதுகா ணெல்லிக்கனியாச்சே. (௱௨௮)

சத்தியுதித்ததிருச்சந்நிதியின்முன்பாக
முத்திதருமெய்ஞ்ஞானமூவரனுக்கிரகமதால்
சத்தியொருபந்தவிட்டுச்சூழ்ந்தசவாய்வுகம்பாய்
பத்திபடர்ந்ததுகாண்பதினாலுலோகமதாய். (௱௨௯)

கலித்துறை.

மாறிக்கலைகொண்டுவம்பரவீதியின்மட்டமதில்
தேறித்தெளிந்துவளைத்துக்கொண்டேன் தசவாயுவைத்தான்
ஊறிநடக்கின்றபானத்தின்வாசிநுனிபிறழா
ஊறிக்கருவிலுறவாகிநின்றுவுதிக்கின்றதே. (௱௩௰)

சாதியுங்கண்டுகுலமேவகுத்திருந்தத்தாரணியில்
வாதிகள்தள்ளிவழக்குரைப்பார்மனுநீதிகண்டு

நீதியும்வேதநிலைகண்டோத்தநேர்வீட்டுக்குள்ளே
சோதியைக்கண்டுவுறவாகிநின் றுதுலங்கினனே. (௱௬௧)

வெண்பா.

அத்திபுரத்திலருகிருந்தாக்கையது
சத்திசிவநாதவிந்துதான்கூடி-வித்ததுமே
மூலக்கருக்குழியில்முச்சந்திவீதிவளர்
பாலகனுயுற்பவிக்கும்பார். (௱௬௨)

குருலிங்கசங்கமதுகூறுமறுகோணவரை
இருமென்றழைத்துவிருந்தங்கு-உருவாகி
நின்றறுபத்தாறுநிறைந்தகருவியெல்லாம்
கொண்டமைத்தவாரதனைக்கூறு. (௱௬௩)

ஈசனுறவாகியெங்குஞ்செனித்திருந்த
நேசமதுசாதிலிங்கநேர்மையே-கோசமது
நாதவிந்துற்பவமேநானறிந்துஞானவெட்டி
பேதமில்லைசாதிகுலம்பேசு. (௱௬௪)

(ஆறுதாரவகை க- இந்திரியவிவரம்-தரு.)

விபரஞ்சொல்லுகிறேன்-தசநாடி - விபரஞ்சொல்லுகிறேன்.

விபரஞ்சொல்லுதுமிடைபின்கலைசுழி- மேவுமத்திச்சிக்குபுருஷின்காந்தாரியும்-அபலம்புருடன்குகுதன்சங்குனியு - மாகத்தசநாடியையிரண்டாண்டையே-இபரம்பெருவிரல்மேலுமிடைகலை - யிம்பம்வலதுபெருவிரல்பின்கலை- சுபரஞ்சுடரொளி மேலுமோங்காரமாய்-சுற்றியேநிற்குஞ்சுழிமுனையாண்டையே, (விவரஞ்) (௱௬௫)

மூலச்சுழிதனிலேமுளைத்தாக்கையு-மீறியேபெருநாடியுயர்ந்துடன் - மேலைச்சிரமகமேருமுடிவளர்விற்பனமுங்கருவுற்பனஞ்சொல்வேனுன்-கால்கொண்டுநாழிகலைகொண்டுவாய்வதும் - காரணமாகவேகண்டமதாய்வளர்- வேல்கொண்டுமேகுழல்கொண்டுடன் மூலமே-வித்தாய்முளைத்தொருபத்திதுநாடிகாண் (விவரஞ்) (௱௬௬)

கண்டமதுநரம்பானகுழைதனில், காந்தாரிநின்றுகலந்துநீர்பாய்நதிடில்- அண்டமதிலத்திசிங்குவைத்தானு-மவற்றையுநாலுமறிவிப்பதாகுமே-நின்றிடுஞ்சிங்குவையப்பதுவின்மயம்- நின்றநிறமதுவுப்பதுவேசலம்-விண்டலம்புருடனிருகண்ணளவு - மேவுங்காந்தாரியுங்காதளவாண்டையே. (விவரஞ்) (௱௬௭)

அத்தியுநின்றதுவலபாரிச - மானதளவாயமைத்தளவாய்பிரம-வித்தையு மாருயிராம்புலனுநிகள் - வேதங்களோது மேலுந்தான்வாயினி சுத்திநிற்குஞ்சுகாதிதசங்குனி- சுந்தரலிங்கஞ்சுகந்ததாள்பாரிசம்- நித்தமேவுங்குகுதனுமாநந்தம் - நேருந்தாள்வாயுமேநின்றிமோண்டையே. (விவரஞ்) (௱௬௮)

நாடியீரஞ்சுநரம்புகள்கூடியே-நல்கிநடப்பதுநட்புகள்கண்டிடி
ல்-நீடியுலாவுமசையுநதடுக்கும்-நிரந்தரதாது சுதந்தரநாடியே - நா
டியசையுமடக்குமுடக்கு, நடந்துமேயோடிநகர்ந்துபிரண்டுமோ
டி கூடியிழுக்குநரம்புநீண், டேறிமாறிபடுக்கும்பாராண்டையே. ()
வாய்வுதசபத்தின்வாறுமறிந்திடில் -வளமையாம்பிராணனபான
ன் வியானனும்,சேயுமுதானன்சமானன்கூர்மனுகன்- திரிகரனுமெயசி
த்திரநாடிதான் - ஆயுநாடிநரம்பதுவுந்தனஞ்செய - னருன்தருந்
தேவதத்துவனீணஞ்சு - பாயுந்தசவாய்வுபத்துடனுனதும்- பார்க்
கப்பார்க்கப்பரிட்சைகளாயிடும். (விவரஞ்) (௱௪௩)
பிராணன்மூலந்தனில்மேல்தொடர்ந்தோங்கியே- பின்னும்பனி
ரெண்டுவக்குலமோடிடில் - அறிவதுநான்குரொண்டடங்கிநாலோடு
ம்அபானன்மலசலமறிந்துபோக்கிடும், பிறியும்வியானனுமுண்ட
சாரந்தனைப், பிறித்தெழுந்தெழுபத்திராயிரநாடிக்கும்- தரியுமுதா
னன்செரிப்பித்தேப்பமிடச், சமானன்சரியாகத்தானிருக்கும்வாறு.
நாகன்கனைவிக்கல்சோம்பலுண்டாக்கிடில், நற்கண்ணிலேநின்று
கூர்மனிமைத்திடில், தேகத்திரிகரஞ்சோபமுண்டாக்கிடில் தேவத
த்தனிக்கொட்டாவிநகைத்திடில், வாகாச்சிரித்திடில்தனஞ்செயனு
ச்சிவாழ்வதுமேலெனுந்தொடக்கியாத்துமம்- ஆகமடங்கியப்போ
தினிலண்ட-மதுபிளந்தாக்கினையப்பாலோடுங்காண். விவரஞ் ()
இநதவிதமறிந் தெவ்வுயிர்க்குமீச னெறும்புமேகடையானைமு
தற்கொண்டு-சிந்தைசெய்யாமல் வெவ்வேறதின்கூறதாய்-செந்துக்
களுற்பனவித்தையிதாண்டையே-சுந்தரலிங்கஞ் சுகாதிதமந்திரஞ்
சுக்கில்விந்து சிரசண்டமாயிடில் - அந்தரகங்கைச் சடைமுடியீச
னமர்ந்திடுங்கோச மரன்கொலுவாண்டையே. (விவரஞ்) (௱௪௫)

விருத்தம்.

யிருகாலில்பெருவிரலில்
இடைகலையுப்பின்கலையுமிரண்டுங்கூடி - நாசிமுனைமுட்
மேலேநின்று-நடுவிலொருகத்தரிக்கோல்மாறலாகி - நோக்கிச்
டிநிற்கு நயந்துபார்க்க - திடமுடையசுழியின்முனை மூலநோக்கிச்
அடைவானசிங்குவைத்தா னுவுக்குள்
சிரசளவுமாதாரமாகிநிற்கும் - (௱௪௭)
ளே-யன்னமுடன் தண்ணீருமமைத்ததாண்டே
வலதுதாள்கார்தாரிவாக்
வட்டமிட்டபுவியதனில் குகுதனிற்கும்- மிருந்திடுஞ்சங்
கில்நிற்கும்-இஷ்டவலம்பருடனிடதாள்வாய்நிற்கு - மபான
குனியும்லிங்கத்தாள்வாய்நிற்கும்- சட்டமுடன்குகுதனிற்கு
ன்தாள்வாய்-சார்வாகுத்தசநாடிசமைந்தநேர்மை- அஷ்டதிசைபுக
மூமுடனுயிருமாக-ஆதரவா யாவிநின்றதருள்செய்வேனே (௱௪௮)
பேரானபிராணன்பெரு மூலந்தன்னில்- பிலத்தவீராறங்குலத்தி
ல்மீளவாங்கி-நேராணசண்டமதி வெட்டெட்டாகி நிலைபிசகாநாலு
மதுவெளியிலோடும் சிரானவபான னுந்திக்கமலத்தின்மேல்- திறமாக

மலசலத்தைக் கழித்துதிற்கும், ஈருனவியானனுண்ட வன்னந்தண்ணீ-ரொழுபத்திராயிர நாடியிலுஞ்சென்றே. (௱௪௫)

நின்றிலக்கு நாடிபதுமிறித்துவைக்கும்- நிகழ்த்திடுமுதானன்செரிப்பித்தேதிற்கும், ஒன்றிலங்குஞ்சமானனுண்டவன்னந்தண்ணீ-ரொருவருக்குமேறவொட்டாதிருக்குமாகில், தன்றிலங்குநாகனுமேவிக் கல்கக்கல்- தனைமிகுத்தல்கூர்மனிருவிழிநீர்பாச்சல், அன்றிவிழிசிமிட்டிவைக்குந்திரிகரன்று-ஞயாசம்சோம்பல்தும்பலசதியாமே. ()

வசதிநகைத்திடுவெனனும் வழலையாவன் - வதைத்திடுவன் தனஞ்செயனுமுச்சியேறி, நிசதிநின்றுமேலாகத்துடிக்கச்செய்வன்-நிரந்தரமாயாதார மேலாய்நிற்பன், நிசதியினால்சரீரத்தில் வாய்வுக்கெல்லாம் - நிஷ்களமாயதிகாயநிலைத்ததாண்டே, இசைந்ததிருமூலனுருணாத்தவண்ண-மினியதொருஞானவெட்டியியம்பினேனே. (௱௪௮)

நிரந்தரமாய்மூலமென்றபாண்டந்தன்னை- நீடுலகில்நடத்திவைத்துமோசஞ்செய்தல், தரந்தரமாய்கருவியெல்லாமாண்டபின்பு - தனஞ்செயனு மகண்டவெளி சார்ந்துயேகி, அறுந்துதச நாடியெல்லாமசைவெல்லாம்போ, யாதாரமாறுமகன்றசைவுமற்று - சிறந்தவுடலுயிர்க்கூறு செயலுஞ்சொன்னேன் - தெரிசனமுங்கண்டுதிரு வுருசொன்னேனே. (௱௪௯)

திருவுருதன்மலர்தரித்தபரனைப்போற்றிச்-செப்புகிறேன்குறைக்கருவிதெளிந்துதானும், மருவுமதிமலர்க்கமலவிதழின்மேவும்-மதுரசர்வாணியருள் மகிழ்ந்துவென்னை, அருவுருவாய்க்கருவிகரணதிபெல்லா - மடிபிசகாநடுவிணையமுடியுஞ்சொன்னாள், குருவருளாலம்பிகைப்பெண்கமலம்போற்றிக்-கூறுகிறேனுடலெடுத்தவரலாறுண்டே

கொச்சகம்.

வாரானகொங்கைமட மாதுகருக்குழியில்
பாராமல்வந்துதித்துப் பரதவித்துநின்றேன்காண்
ஊராங்கருவூனா யுற்றதுணையென்றுநம்பி
மாராட்டத்துள்ளேயான் வந்துசமைந்தேனே. (௱௫௧)

பாராமலேயெழுந்து பத்தியருள்சித்திபெற
நீர்மேற்குமிழியென்று நினைவிலறியாமல்
சீர்மேலெழுந்தசிவ நாதவிந்துதன்னருளால்
ஊர்மேல்வளர்ந்துமன துள்ளமதிகெட்டேனே. (௱௫௨)

காயாபுரிநகரிற் கனககிரிமேவிவளர்
மாயாய்ப்பிறவியெனு மகிழ்ந்திருப்பதெக்காலம்
தாயாய்முலைகொடுத்துச் சார்ந்தென்னையீன்றகுரு
தேயாமணிவிளக்கே செம்பொனருளம்பிகையே. (௱௫௩)

அம்பிகைப்பெண்செப்பொன்மணி யமிர்தரசபானமருள்
நம்பிதிருவமபரமே நாடிநடனம்புரிவாய்
உப்பரருள் நாதவிந்து வோர்கருவிபொன்றறிவால்
கும்பமுனியா லுரைத்த கொஞ்சும்ரத்நமானதியே. (௱௫௪)

ஆதியந்தநிற்குணமே யண்டபிண்டமேவுதிருச்
சோதிநடனம்புரியுஞ் சுழிவீட்டுவாசலிலே
நீதிக்கருவூர் நிலையாய்க்குடியிருந்து
சாதிகுலமெல்லாந் தவிர்ந்துசதுர்மேல்வளர்ந்தே. (௱௫௫)

வெண்பா.

ஆராதகும்பிதனில் துலையாத பாண்டமதில்
வீராகவீற்றிருந்தேன் மேல்வீட்டில்-நேராக
சண்டனணுகாமல் சதுஷ்கமல சந்நிதியில்
அன்றுதித்து வந்தேன்கா ணண்டே. (௱௫௬)

பசுபாசயோனிதனில் பாராமலேயழுந்தி
விசுவாசபாதகராய் விரகழிந்து-நிசுவாச
நதியிற்கண்டயோர நவசித்திரமண்டபத்தில்
விதியேகெதியெனவே விந்து. (௱௫௭)

விந்துவழியறிய மேதினியில்யானுதித்து
வந்தவழிகண்டறியா மையல்கொண்டு-தையலுடன்
விரகமதிசுகமே யின்பமதுவேகடலில்
அரவமது வாய்வினையென் றறி.

கலித்துறை.

சுருதிமுடிந்த திரிகோணவட்டச் சுழிமுனையில்
இருந்துவளர்ந்தி கருவுருவாகி யினிதசையான்
கருதிவிளங்கு மதிமலர்வாசங் கனகிரிமேல்
சதுஷ்கோணவீட்டிலிருந்துமெய்ஞ்ஞானத்தலமறிந்தே. (௱௫௯)

மடலோலைகொண்டு வெழுதாதசோதி வடிவதனைச்
சடமேவுகின்ற வகையுரைத்தேன்சர்வ காலமெல்லாம்
உடல்மேவுகின்ற கருவூரதுதனி லுள்ளதெல்லாம்
திடமாகயானுஞ் சபைமேவிநின்று தெளிவிப்பனே. (௱௬௰)

வசையமுறை - தரு.

வசையஞ்சொல்லுகிறேன் - ஆண்டைகேளீர்
வசையஞ்சொல்லுகிறேன்

வசையமினிஐந்தும் வசனிப்பதாகவும் - வகுக்க அமாவாசையம் பருவசையமும்ரெண்டு - சுசையமலவசையஞ் சலவசையமும்ரெண்டு-சுக்கிலவசையமுடனந்தங்காணண்டையே - அசைதலைந்துகுணமு மறியவசையமதி - ரக்கையைரட்சித்தருளு மாண்டேயுனது

பதம் - நிசைதலம்பிசைமாது நிலைத்தபடியுணாக்கும் - நெறியைத்
திருவள்ளுவன் நிகழ்த்தஞானவெட்டியான். வசை (௱௬௧)

அன்னந்தண்ணீரிருக்கு மிடமுமமாவசையு - மதலையினிபிறி
க்கு மிடமும்பருவசைய - முன்னமலமுஞ்சேரு மிடமுமலவசை
ய - மூறியேநீரதுசேரு மிடமுஞ்சலவசையம் - சொன்னபதிக்கெ
ட்டாத சிவமூலநாதவிந்து - சுக்கிலவசையமென்று சொல்வேளுக
மப்படி - தன்னைத்தன்னையறிதல் தலமூமறிதலுமே - சங்கையாவது
ஞானதத்துவக்கட்டளையாணமே. வசை (௱௬௨)

கோசமயமுமைந்துங்குறியறிதலும்பேத - குணமாமன்னமயத்
தால் பிராணமயமிரண்டும் - வாசமுமன்னந்தனிலும் பிராணமயமு
ந்தோன்று - மன்னமயத்தில்பிராண மனோமயங்களுந்தோன்றும் -
நிசமாமனோமயத்தில் விக்கியானமயமுந்தோன்றும் - திருவிக்கியான
மயத்தி லானந்தமயமுந்தோன்றும் - இசைவாமெண்சாணுடலிலெ
ழுபத்திராயிரமு மிருந்துகாத்தரட்சித்துஇருவினைகளுஞ்சூழ. ()

மூலாதாரத்தில் சுவாதிஷ்டானமுமறிதல் - மூலமுமணிபூரகம
னாகதம்விசுத்திகாணு - மேலாமாக்கினைபுமா தாரமுமாறுவிதமாய் -
விசிதமிதுவறிய விதியைவெல்லலாமோசொல் - மூலமெனுங்குய்
யத்து நடுவேசுவாதிஷ்டான - முதலானதுவேலிங்கஞ் சிவமேஞான
ப்பிரகாசம் - ஞாலமுமணிபூரகம் நாபிக்கமலமது - நாடியவனாகத
மு மிருதயமென்றிதுகாணும். வசை (௱௬௪)

நின்றறிது விசுத்திக் கண்ட ந்தனில்நினைக்கும் - நேராவாக்கினையின்
மேல் மதியங்கண்டறியலாம் -மண்டலமூன்றுமறிதல் வன்னியெனு
மக்கினி - மகிழுமண்டலமிது வசையறிவதுநல்லோர் - அண்டர்கள்
முனிவர்போற்று மாதித்தமண்டலமெய்தல் - அதிலுதித்திடுஞ்சந்
திர வகண்டமண்டலஞ்சூழும் - கண்டமெப்படியண்டமண்டலமறி
ந்தெந்தன்-கருத்தில்நினைத்தபடிகருவிதொண்ணூற்றாறும் வசை ()

அக்கினிமூலந்தொடங்கி நாபிக்கமலவித - மூளவாகியேயுதித்து
ஆதித்தமண்டலமீறி - திக்கில்திக்கிலினியநாபிக்கமலமெய்தல் - திசை
களெட்டதற்குந்தொட்டளவிற்றெளிந்திலகும் - தக்கபுகழுஞ்சந்திர
மண்டலமிருதயத்தில் - சார்ந்துசார்வாய்தொடங்கி சடைமுடியடி
நடு-விக்கிரமசுடர்மதிசூழக்கினிமண்டலமூன்றும் - விளங்குமதுரத்த
மிழமிர்தசிந்துரத்தினம். வசை (௱௬௫)

மும்மலமூன்றுமூதிக்கு முன்னமேமூலநடையறி - மூளையுமாண
வமாய்கை மோகமதாகியகாமியம் - நிர்மலசொரூபநிலை நினைவுமுக்
குணஞ்சொன்னேன் - நெறியைச்சொல்லவுஞான நேசமேயறியலா
ர்காண் - அம்மெனுநானென்றுநானை ஆணவங்காத்திடவுமே - யப
சயமேதனக்கு யாவுரறியாக்கோபம் - தம்முயிர்போந்தனைக்கொண்

று - தன்னையறியாமல்நிற்குந் - தன்புத்தித்தானறிந்தாலுந் தானொருவ னைக்கேட்கும். வகை (௱௬௭)

நம்பிமன தூவேறுய்காயியந்தனைக்கொன்று - நானிலங்கண்டதுக் கெல்லாநானென்றுமாசைப்படுதல் - வம்புமிகவுஞ்செய்தல் மாதர்ம ங்கையர்மேலு - மயல்கொண்டு விரசத்தால் வாதுபோ ராடல்பே சல் - துப்பமூன் றுதித்திடும்வகையை யாவர்கள்காண் - அடியா ய்வாதமும்பித்தஞ் சுகந்தசேத்துமமூனறும் - தப்பனமுள்ளவாய்வ துமோடிக்கலக்கமதாய் - தாபமுஞ்செய்தேயக்கினி சார்ந்துமத்தி பஞ்செய்தல். வகை. (௱௬௮)

வாசமுள்ளபிராணத்தின்வாய்வு நெட்டிட்டுமோடிவளரு மக்கினி யதைமடக்கிமத்திபஞ்செய்தல் - நேசமுடனேபித்தம் வன்னியோ டனுமித்துநிறைந்துமத்தித்தசலம்நெடியவினையுண்டாக்கும்-சேத மிகவுண்டாகுஞ்சேத்துமரோமத்துவாரம் - சிறந்துவோடியிடைபி ன்பிறியாய்ச்சிநேகஞ்செய்தல் - மாதராசையிலிந்தநாடி யின்னிட் டடங்கி-மறிந்தறியாமல்தாதுமடங்குமென்றுரையாலும். வகை ( )

இச்சைமூன்றுனவிதமினியுரைக்கும்வகைகா - ணிதுவேபுத்திரவி ச்சைலோகவிச்சையுமாகும் - பட்சமாமர்த்தவிச்சையுமிதன்கூறறி யவேந்தன் - பரிபூரணவம்பிகைபாதமலர்பணிந்தேன் - அஷ்டதிக் கும்புகழுமகத்தீசாருள்போற்றி - யடியன்திருவள்ளுவனவனிமீதி லிந்நூல் - நிஷ்டையோகத்தின்ஞானநிகழ்த்தமூன்றுவகை நிகழுமி ச்சையதின்சுகத்தைக்கண்டவனுண்டே. வகை (௱௭0)

புத்திரவிச்சையின்குணம் பொருண்மேலாசைப்படுதல் - புவி யில்மண்ணின் பெண்ணாசைபுவனமாளவுஞ்செய்தல் - அர்த்தத்தின் மேலுமதிகவாசைப்படுதல்நெஞ்ச - மறிதலோகவிச்சையின் விதியி ன்பயனுரைத்தல் - வெற்றிப்பாரிலுயர்ந்தகாணிபாட்சிவிளம்பல் - வெகுநாளுறவின் முறைதகுந்தகாதுவிளம்பல் - உற்றகாரியமுணர் ந்திச்சையதின்மேலாத - லுசிதப்புண்ணியங்கள் செய்து வசிதம்பார்த்தி மோதல் வகை (௱௭௧)

அர்த்தவிச்சையின்குணமதிககாமியந்தேடி - யன்பதிகமுமாசை யின்பமதிலுண்டாதல் - எத்திசையினந்தகாரியிலுமக்கைய - ரின் னரிவர்களெனுமெண்ணமலுமிச்சித்தல் - சத்திவிரகதாபசங்கையி லுமனதாய் - சார்ந்துவிசாரமெய்தல்தனைப்புகழ்ந்துணர்வாதல் - வி த்தையெனு மிச்சைவர லாறுமூன்றின்விவர - மெடுத்துரைத்தேனு ண்டையேதொடுத்தேனுதவிந்தாலே. வகை (௱௭௨)

குணவிசிதலட்சண மறிவுதித்தபடி - குறித்தமூன்றுவிதமாய்வி ரித்துச்சொல்லுவேன்காணும் - மணமதாகியகுணராசததாமசம்பொ ண்டு - மகிழுஞ்சாத்திகததோடுசமூமூன்றுவிதமாய் - அணமாம் ராசகுணம் செருளிபலபேசாமல் - அதித்திடுவோர்தமக்குக்கொ

டுத்திடுதலுமேன்மை பணம்விசிதம்வேண்டிய பாக்கியங்களளித்த
ல்-பண்புபாராட்டலாதல்பலவுபகாரஞ்செய்தல். வசை (௱௭௫)

தனைச்சார்ந்தோர்கள்தமக்குதகமைகாத்திடும்பேசல் - தனதுசம்
முயிர்போலுஞ் சார்ந்துரட்சித்திடுதல் - இனம்வேண்டிடுதல்பகை
யிகத்தல்பலகலைக - ளிசைந்துலகிலகங்கொண்டிருந்துவாழ் தலுமு
ண்மை - கனமுமினமுநலம்புகழும்வாஞ்சையொடுக்குங் - கருதுந்
தாடாண்மையின்பங்கருவிலமைத்தபடி - முனையும்ராசதகுணந்த
னையேயறிவிப்பதுமெனையேபுகழ்வதில்லை தனையேதாதவித்தருள்.

மிருளுந்தாமசகுணவிசிதமேன்மேல்விளம்பல் மிகுதியாதொ
ருபழிவிகடம்வஞ்சனைசெய்தல், அலறுவழிபாடாக வொழித்தல்வ
ணக்கமாற லறவடுவருங்வெகுளியதனை விரும்பலெனல் - பிரளல்
செய்தநன்றியைப்பிரித்தலுறுதிமாறல் - பெரிதாய்வித்தைமிகவும்
பேசல்கடூரம்வாஞ்சை- முரணுமுகத்திடறுபகையுடனேயும் வாழ்த்
தல்-முன்விளைத்தபழியேமுனைதல்கூறலுமாண்டே. வசை (௱௭௬)

கொலைகள்காமியமும்பொய்குறித்தல்கோள்கள்பொல்லாங்கு- கு
சிதம்யாவையும்புகழ் குரோதங்கடூரமெய்தல் - அலைதல்காமத்தினி
வைகுரோதமதித்சங்கை - யசத்தியநாள்தோறுமெய்த லறிதலாண்
டையேகேளீர், பலபலவுங்கடிசிலது தொழில்விகற்பம்- பகர்தல்பா
வியெனவுஞ்செகதலமுமதியா - கலகம்பிரியமெனலுமுலகமாத்திய
ஞ்சொல்லுங்-கருவில்தாமசகுணகாட்சியிதாண்டையே. வசை ()

அதிதசாத்தியகுணமறிதலநேகவித - மனைத்தும்படைத்தகர்த்த
ன்மனதுளிருப்பதெனில் விதித்தமதங்கடிவு வாய்மைதயவொடுக்
க மிகுத்தசார்ந்தகமைதனநினைவுதகைந்திடுதல் - உதித்தவன்புபெரு
மை புகழ்பல்குணவிசித - முரிமைமறையினிறைதருமமானமியக்க
ல்- கதித்தநல்லோர்க்கிதல் அறிஞோர்களைவாழ்வித்தல்- கருதுமிறை
வனடிபணிதல்நலமறிதல். வசை (௭௭)

மகத்துக்களின்மனதுமகிழ்ச்சிவருவதெனில் - மலர்க்கமலபதத்தி
ல்வணக்கஞ் செய்திடுதலால் அகற்றும்பழியகற்றல் வினையும்பிணி
யொழித்த-லதிதநல்லோர்பெரியோரவர்க்குப்பொருளுமீதல்- இக
த்திலறமுநதேடலுறவின்முறையதீத - மினமுஞ்சுற்றத்தாரையுங்க
னமுங்காத்துரட்சித்தல் - மிகுத்தல்பசியகற்றலகுதிபரதேசிகள் -வி
ரும்புமன்னபலாதி விளங்குமேவுமீதாண்டே.। வசை (௱௭௮)

ஆத்திராவாசங்கள்செய்தலருமறையோரைக்காண, வருள்தேவ
தைகளுக்கு மாகுபலிகொடுத்தல - தேத்தியஞானப்பிரகாசநதெ
ளிநதவர்கள்தமக்கு - சிறதையையகற்றியுப சாரஞ்செய்திடுதலால்
போற்றிடும்புல்லணியஞ்செய்தலின்பசுகநதமலர், பூசுரர்தமக்குநல

ம்புகழும்பூசையளித்தல் விற்றிடுஞ்சாத்தியகுண விசிதலட்சணங்க ண்டு விளங்குமூன்றின்விவரம்விதித்தவாறது ஆண்டே-வகை (௱எகூ)

நாதவிந்தினாலேநரகசொற்கமிரண்டும் - நவிலுநல்வினையுந்தீ வினையுநாடியவாறில்- வேதங்களுமுதித்த சாரம்விண்ணுமண்ணாகில் விளங்குநல்வினையும்வந் துதித்தல்புண்ணியஞ்செய்தல் - ஓதுந்தீவி னையுஞ்செய் திடும்பாவங்களுமெய்த - லுலகமாதிதமிவ்வா றுடலெ டுத்துவமையால் - மாதுவம்பிகையெந்தன் மனதுக்குளுணர்வித்த வரவாரறிந்ததிந்நூல்வசனித்தேனுண்டையே. வகை (௱அ௰)

ராகமிதுவெட்டபான நடத்தையிவ்வாறிதல்-நலத்தகாமக்கு ரோதலோபமோகமதாகி - அகந்தனிலுதித்தமத மாச்சரியத்தோடு மமைத்திடலுமிடும்பையறிதல்வேட்கையிதுகாண் - பாகமத ங்ய தேஞ்சரீரங்களிலுதிக்கும்,பலனேயின்னதினிதும் பகர்ந்துசொல் லுவேன்காணும் - தேகக்கட்டளையின்வ றுசெய்கைசெந்துகட்கெ ல்லாந்-தெளிந்துசேர்பிசகாமல்திருத்தஆண்டையேகேளீர். வகை

மாதனாக்கண்டாசைகொண்டிடுங்காண்விரகதாப - மயல்கொ ண்டதிதகாமம்வருதல்மன்மதபாணம்-பேதபேதமில்லாமல் பிதற் றம்வணக்கமில்லா - பிணக்குமதிதருரோதந் தனக்குந்தனைத்தெரி யா ஓதுமனதிலொன்றைநினைத்தபடிமுடித்த - லொருபிடியாய்ப் பிடித்தலுறுதிவிடாதுலோபம்- எதுவாகிலும்பெருமையின்பசுகா திசுக மெய்துமனமகிழ்ச்சியிதுவேமோகாதிமோகம். வகை ()

சூதுமனதிலெண்ணல் தடியாக்கோப்முனைத்தல் - தொடுத் திடுதலும்பழிதுன்பமெய்திடுமேதம்- யாதொருகாரியங்களி லதுவிச் சைமனதெய்த-லானந்தம்பெருகிமின்ப மடையுமாச்சரியங்காண் வாதுபோராடவொருசொல்லாயிரம்விரிவாய் - அனல்கொண்டாங் காரமெய்தல்வருமிடும்பையுமாதல் - வேதுவித்வேஷிணம்பலவும்ப லவுமெண்ணல் மெய்பொய்யாங்காரங்கொள்ளல் வேறுசெய்தலு ம்வேட்கை. வகை (௱அகூ)

ஆகமத்திலுதித்தராகமத்தின்பரிட்சை யதிதகுணலட்சணம் விதிதவருமலெட்டும்-பாகமதாயுரைத்தேன் பகவான்சொற்படிபா ரில்-பலகலையுந்தெளிந்து பழம்பொருள்களைக்கண்டு - ஏகவஸ்தி வொன்றுமேலெடுத்தேன்தத்துவநெறி - யெறும்புகடையாயாவை யெண்பத்துநான்குமுதல் - தோகைமாதுவம்பிகைசொல்லுஞ்சூட் சமறிந்தேன் சுருதிமுடிவைக்கண்டுதொடுத்தேன் ஞானவெட்டியா

அவத்தையைத்தனித்தனியொவ்வொன்றாய் விரித்துச்சொல்வேன்கா ணு-மாக்கிரசாக்கிரசொற்பனஞ்சுழுத்தியொடுதுரியம்- பவத்தைப் பவனுதிதந்துரியாதீதத்தோடைந்தும் - படைத்தாரெண்சாணுடலி லெடுத்தார்ஜெகத்துள்ளோர்க்கும், இவத்தையெனுஞ் செநநமிதி லுதித்ததுகாணு- மெவரொவர்க்குமிதுவே யேகவஸ்துவிதாகும்-தவ

த்திலிகுத்தவந்தவமேமெய்ஞ்ஞானநெறி - தத்துவமறிந்ததன்
னைத்தானறிந்திடுமேசொர்க்கம். வகை (௱௮௫)

ஆக்கிரமுஞ்சாக்கிரம்நிற்கு மதுவும்லலாடஸ்தானத்தி-லறிதல்நெ
ற்றிநேர்மையமகைதல்காயத்தோடென்னில் - வாக்கிற்சொற்பனம்
கும்வாய்தல்கண்டஸ்தானத்தில் - மருவியகருவிகளமைத்தவாறுண
டையே - விக்கிரமச்சுழியின்முனையிருதயகமலந்தனில் - விளங்குந்
தானமறிதல்இன்பமிதுவாறுகாணும் - நிக்கிரகதுரியஸ்தானநேரு
மேநாபிக்கமலம் - நிரந்தரமாயிருத்தல்நிலைக்குஞ்சரீரமென்னில் ()

உத்தமதுரியாதீதமூலாதாரஸ்தானத்தி லுறுதிபெற்றிலகுமிவ்
விதத்திலுதித்தவாறு - தத்துவத்தொண்ணூற்றாறுஞ் சரீரத்தனிலுதி
க்குந் தகமையறிந்துவெந்தன்தாய்சொல்லயானறிந்து - வித்திலு
தித்தவாறும்விளங்குங்கருவின்வாறு - மிகுத்ததத்துவந்தொண்ணூற்
றுறைவிதிக்கும்வாறும் - கர்த்தனருளாலுடல்கருதரித்தநேர்மையுங்
கருவிகரணாதிகள்கண்டுஆய்ந்தவனுண்டே. வகை (௱௮௭)

சித்தாதிகள்மகிழும்பெரியோர்களும்புகழும் - ஜெயம்பெற
வேயுலகில்செந்துக்களெல்லாந்தழைக்க - உத்தமயோகிகளெந்தனு
றுதிமிகவுங்கண்டு - யோகவான்திருவள்ளுவனுலகிலவனேஞானி-விக்
துவானெனமகிழ்ந்துவேதவேதாந்தசாரம் - விளங்கினார்களமிர்தவி
சிதரத்நபீடம் - உத்தமனொனுமுனிவர்சிவசிங்காதனமீது - வுனையறி
ந்துமொழிந்தவுகமைமீதெனுமாண்டே. வகை (௱௮௮)

கர்த்தன்செய்கைவிதிகாண்கருவிலமைத்தபடி - காரணசற்குரு
வாக்கியங்கண்டாலல்லோதெளியும் - பெற்றபேர்களிப்படிவித்தின்
சம்பிரதாயங்கள் - பேசிப்பேசினுலென்னபிராணயமறியலாமோ
தந்துவந்தொண்ணூற்றாறுந்தானேநீறநீறுக்கி - சாதித்தால்காயாதி
கற்பஞ்சாயுச்சியமறியலாகும் - நித்தநித்தம்வாசிகொண்டுயித்துவுகி
னுலல்லோ - செத்தபிணமெழுந்துசத்துஞ்சித்தறியலாம். வகை ()

விருத்தம்.

விரிவானதுருவமெனுமூலவீட்டில் - வேதமதுக்கெட்டாதரூ
பமாகி, கருவாகித்தெவிட்டாதகனியுமாகி - கதிராகிமதியாகிகாற்று
மாகி, உருவாகியுடலாகியுயிருமாகி - யொளிவாகியலகையெனுமுட
லுக்குள்ளே, யருவாகியருள்ஞானசொரூபியாகி - யங்கமதிலிங்கம
தாயமைத்தேனுண்டே. (௱௯௰)

மறைகடந்துவெளிதாண்டிசுழினைக்குள்ளே -மறைநான்குமறி
யாதமதியைக்காணக், கலைகடந்துசுழிக்குநடுவணையினுள்ளே-கதிரி
லகுந்திருநாட்டுக்கமலவீட்டில், நிலையறிந்தகதலியடி பானுக்குள்

ளே - நிலையாதசெங்கநதிகளாயின்மேலும், திரைமேவுந்திருநடன வீட்டுக்குள்ளே - சிவந்தெழுந்துகொழுந்தாகிவளர்ந்துதாண்டே.()

முத்துதிர்ந்துகுலைசாயுமூலநாடு - முனையதிந்துகலைபாயுமுவண நாடு, சித்திருந்துவிளையாடுந்தெய்வநாடு - திவ்யரத்நபொக்கிஷமா ஞ்செல்வநாடு, சத்திசிவமிருந்துதிருநடனஞ்செய்யும் - சதாசிவனு ங்கொலுவிருந்துவாழ்ந்தவீடு, அத்திபுரமிலகுகின்றகருவூர்நாட்டி- லறைவீட்டில்குடியிருந்துவமைந்தேனுண்டே. (௱௬௨)

ஜாதிகுலம்வகுத்திலகுங்விந்துநாடு - தானுதித்துபத்துதிக்கள்வ ளர்ந்தநாடு, நீதிமறைசாஸ்திரமாம்வேதநாடு - நெறிபலவுஞ்சகலக லைபுதித்தநாடு, சோதிமதியாகிநின்றுதுலங்குநாடு-சுழிநாடுவளநாடு தொண்டநாடு, பாதிமதிதனையணிந்தபரமநாட்டில்- பதியெனவே குடியாகவாழ்ந்தேனுண்டே. (௱௬௩)

தேனருவியமுர்தநதிக்கசிந்துபாயத் - தேவர்சித்தர்முனிவர்துதி த்திலகுநாடு, ஞானிகள்வந்துதித்திலகுங்கருவூர்நாடு - நல்வினையுந் தீவினையுமமைத்தநாடு, தானவனுய்நின்றிலங்குமரூபநாடு -சற்குரு வுஞ்சந்நிதியுந்தழைத்தநாடு, வானதிகொண்டறுசுவையையொழித் தநாடு -வானவர்கண்மகிழுமணிமந்திரநாடே. (௱௬௪)

அண்டபிண்டமிரண்டுமுதித்திலகுநாடு - அருணனெனுஞ்சோம னவதரித்தநாடு, மண்டலமூன்றதிக்குமருள்கொந்திநாடு- மாமறை யுமாகமங்கள்வாழுநாடு, கண்டனந்தகருவூருநாட்டுக்குள்ளே - கனக ரத்நமாதுவொளிவாகிநின்ற, வென்றதிருவம்பிகைப்பெண் விளங்கு ம்வீட்டில்-மிகுத்தவறைக்குள்ளிருந்துவமைந்தேனுண்டே (௱௬௫)

அத்தமுள்ளநவசித்திரக்கூடந்தன்னி - லகண்டமெனுந்தீபவொ ளிவாகுநாடு, சந்தனமுங்குங்குமமும்விளைந்தநாடு - சர்வவுயிரொடுத் துடலாயமைத்தநாடு, செந்தியொளிசிவனுலமையும் பிரகாசிக்குஞ், சிறுபிறையுமயிர்ப்பாலந்தேவநாடு, வெந்தணலுமெழுந்துதிருநட னமேவு - மேல்வீட்டினின்றுவுருவானேனுண்டே. (௱௬௬)

உருகருவாய்நின்றிலங்குமூந்திநாடு - வுத்தமர்கள்சித்தர்தவம் பெ ற்றநாடு, மருநாடுவானுடுமலரினுடு - மதமூடனேயாச்சரியமான நாடு, சிருநாடுகருநாடுசெந்திநாடு- செங்கநதிபொங்குமுயல்சிறந் தநாடு, அருநாடுகுருநாடுவகண்டநாட்டி - லருள்பெறவேயுருவாகி யநிந்தேனுண்டே. (௱௬௭)

கால்வாங்கிவட்டமிட்டுமேலேநின்று - கமலதிருவாசலின்கீழ் கருதியானும், மேல்வாங்கியுயருகின்றவன்னியோடே-வெளிகடந்து நாம்சதிரவீட்டுக்குள்ளே, சேல்வாங்கிநூலிழைத்துப்பாவுமோட்டி-

ச்-சித்திரமாய்க்குழிதனிலேநீசவுமாக்கி- தேல்வாங்குவிழிமடவாளு ந்திக்குள்ளே-சித்திரமாயுடலெடுத்துவளர்ந்தேனுண்டே. (௱௯௮)

வசையமைந்துநின்றவரலாறுசொன்னேன் - வசனித்தேனவரவர்கள்வசையுஞ்சொன்னேன், விசயமெனுமூன்றுக்குள்விரிவுஞ்சொன்னேன்-விவரமதாயவர்கள்செய்கைவிளக்கஞ்சொன்னேன், அசைவில்லாமண்டலமூன்றருளுஞ்சொன்னேன் - அறிவுடையக்கோசமைந்துமதிதஞ்சொன்னேன், தசவாய்வுந்தாதுநின்ற தலமுஞ்சொன்னேன்-சரீரத்தினின்றதெல்லாஞ்சாற்றினேனே. (௱௯௯)

அஷ்டகுணராகமெட்டுங்கூறுஞ்சொன்னேன்-அவர்கள்செய்கைவிவரமறிந் தனந்தஞ்சொன்னேன், நஷ்டமில்லாநல்வினைதீவினையுஞ்சொன்னேன் - நற்குணமுந்துற்குணமு நயந்துசொன்னேன், கஷ்டமெனுமும்மலத்தின் கருத்துஞ்சொன்னேன் - கருவறியாமூடர்குணக்காட்சிசொன்னேன், தீட்சையெனுமூலெழுத்தின் திறமுஞ்சொன்னேன்-திருமூதலாம்வீட்டில்குடியிருந்தேனுண்டே. ()

ஊனிருந்தவுடலுக்குளுயிரின்வாறு - முற்றகுலதத்துவமுந்தொண்ணூற்றாறும், தானெடுத்தவுறவின்முறைநின்றநேர்மை - தனித்தனியே பிரித்துவகைசபையிற்சொன்னேன், தேனருவிபாயுந்திருநாட்டுக்குள்ளே - சேர்ந்தெழுந்தகருவியெல்லாஞ்சேர்க்கையாக, நானெடுத்தவுடலுமிந்தப்படியேயாச்சு-நயந்தருளுமாண்டைகுலமறிகிலேனே. (௨௱௧)

கொச்சகம்.

வறுமைதவிர்த்துமிக வாழ்நாடுவீதியில்யான்
கருமவினையாலுங்கட்டிவிட்டேன் கருவீடாய்ப்
பெருமையுடனேமகிழ்ந்து பேருய்வளர்ந்ததினால்
அருமைகுலையாமலே யம்பிகையைப்போற்றினனே. (௨௱௨)

திரைபோட்டுஆடுகின்ற தில்லைவனச்சோலையினுன்
கரைபோட்டணைகோலி காயாபுரிநாட்டில்
உரைகேட்டகன்றவெளி யுற்பனமாந்தப்பொருட்கண்
டறைவீட்டுக்குள்ளிருந்துவம்பிகையைப்போற்றினனே. (௨௱௩)

நங்கைசங்கையில்லாத ஞானதிருவீட்டிலும்யான்
கெங்கைக்கரையிருந்து கேளிக்கையாடையிலே
அங்கத்திருக்கோயி லம்பிகைப்பெண்மாதளவால்
பங்கம்வராமலுமே பதியிற்குடியிருந்தேன். (௨௱௪)

சித்திரதனுக்கோட்டியெனுஞ் செங்கநதிகங்கைவளர்
பத்திரமாயானிருந்தே பங்கமதுவாராமல்
நித்திரையுஞ்சொற்பனமுநேர்மைகடந்தேகவெளி
சத்தியெனுமம்பிகைப்பெண்தாள்பணிந்துபோற்றினனே. (௨௱௫)

ஆராய்ப்பெருகுநதியங்குவளர்கெங்கையில்வாழ்ந்
தோராயிரக்கமலத்தொன்றிருநாலுந்தியின்மேல்
மாறுதருந்தவஞ்செய்மாமதுரவம்பிகையை
நேராய்ப்புணிந்துவருள் நின்றுவரம்பெற்றேனே. (உ௱௬)

வெண்பா.

விரிவார்துருவவெளிவெய்யோனெடுக்குகின்ற
கருவாம்பெருங்குழியில்கால்வளர்ந்தே-னறிவாக
சிரசுருபமானதேனெழுகுமண்டபத்தில்
வரசுருபமாய்வளர்ந்துவந்தேன்: (உ௱எ)
நூல்வாங்கிநின்றதொருநொய்யதிருவிட்டில
காலவாங்கிவல்லிக்கலந்தே-மேல்வாங்கி
அன்னைசிறுவம்பிகையினுத்தாளருட்கமலம்
என்னையழைத்தமுதீந்தாள். (உ௱அ)

கலித்துறை.

வாங்கித்திரைகொண்டுவெம்பிகைபாதமலரடியில்
தேங்கித்தெளிந்துசிவநாதவிந்துசிறுவரைக்குள்
ஓங்கிவளர்ந்துவொருகொழுந்தோடியுலகமெல்லாந்
தாங்கிப்படர்ந்தாசதுர்மேற்குடியிற்றவமிருந்தே (உ௱௯)
அழியாதமூலக்கருவிடுதன்னி லமைத்தவிந்து
செழிவானநாத முறைந்திடும்போதுசிவமதற்கு
கழியாகவெட்டுங்கழிந்திடுநாலுங் கருத்தினில்தான்
ஒழியாததுநின்று வயதேயதற்குவுரைசெய்வனே. (உ௱௰)
மருவிப்பிறந்த வலங்காரவீதிமாளிகையில்
உருகித்தெளிந்து மொருதுளிபாய்ந்து வுடலுயிராய்ப்
பெருகித்ததும்பிமயிர்ப்பாலம் வைகைப்பெருக்கனமேல்
கருவிப்பலகுலத்தாலேயுடலொன்றுகண்டுகொண்டே(உ௱௰க)

விருத்தம்.

உண்மையெனுங்கருவிகள்தான்தொண்ணூற்றாறு - முடலெடுத்தநேர்மையெல்லாமுறையாய்ச்சொன்னேன், நன்மையுள்ளநாதவிந்துகூடும்போது-நல்வினையுந்தீவினையுமமைத்தவாறு, தன்மையுள்ளஜெகச்சோதிவகுத்தவிட்டில் - சமைநதிருநதமைநதருக்குவயதுஞ்சொல்ல, வண்மையெனுமம்பிகைப்பெண்ணருளினாலே - வசனித்தேனறிநதமட்டும்வசனித்தேனே. (உ௱௰உ)

ஊனெடுத்துவுலகுக்குளுதித்தபால -'னெருமூன்றதிங்களினில்மடிநதவாறும், கூனுடனேகுருடுசெவிடானவாறுங்-குறைநதுகைகால்சப்பாணியானவாறும், வானெடுத்தவாறுதிங்கள்மடிநதவாறும்-வளர்பத்துதிங்கள்சென்ற மாண்டவாறும், தானெடுத்துப்புவிதனிலேயிறநதவாறுஞ்-சவமாகிநில்றதுவுஞ்சாற்றுவேனே. (உ௱௰௩)

பத்துவயதானபின்பிறந்தவாறும் - பருவத்திற்பதினைந்திற்மடிந்தவாறும் மற்றுமொருவிருபதிலேமாய்ந்தவாறு-மறவிருபத்தஞ்சதிலேமடிந்தவாறுஞ் -சித்ததிதமுப்பதிலேசெடமுமாய்ந்து -செப்பிடில்முப்பதுவுமஞ்சில்செத்தவாறும் - உற்றதொருநாற்பதிலேயுயிர்போமாண்டு - உயர்கின்றவைம்பதிலே யுடல்போமாண்டே ()

அன்னையெனுங்கருவதனிலுதித்துப்பாரி-லவதரித்துஜநதுபத்திறந்தவாறும்-வின்னமாமாறுபத்தில்மடிந்தவாறு- மிகவறுபத்தஞ்சதிலேமாய்ந்தவாறும்-இன்னவிதமெழுபதிலுமிறந்தவாறு - மெழுபத்தஞ்சதுவுமதில்மாண்டவாறுஞ் - சொன்னவிதமெண்பதிலுஞ்சொக்கும்வாறுந்தொண்ணூறுஞ்சென்றபின்புசொல்வேணுண்டே.

பூவாகிப்பிஞ்சதிலேமடிந்தவாறும் பூத்தமலர்காயாமல்போனவாறும்-மாவாகிகருக்குழியில்கனைந்தவாறு - மரக்கொடியோடேமடிந்துகாய்ந்தவாறும்-மேவிநின்றுவினைப்பழுதால்போனவாறும் வினைத்தவினைமுளைத்துவினைவிதைத்தவாறும் - பாவாகியச்சதிலேபூட்டிநெய்து-படைத்தகருவிவரமினி பகர்வேணுண்டே. (௨௱௪௬)

(ஆயுர்விருத்தி - தரு.)

வயதுசொல்லுகிறேன் - நூறுண்டுக்கும் - வயதுசொல்லுகிறேன்

வயதுசொல்லுவேனினிநாதமும்விந்துவு - மாதர்க்கருக்குழிவீதிவிட்டேகியான்-துயரமைத்துச் சுழிவிட்டுவாசலில் - துய்யசெகப்புடன்வெள்ளையுங்கூடிப்பின் - உழுதுபயிரிடு மம்பரவீதிவிட்டோங்கிச்சுழிமுனைத்தாங்கிமேடேறிகாண்-அழுதாத்துமத்தின் கருவியின்பாச-மறிந்திடும்பூருவமற்றலமாறியே. வயது (௨௱௪௭)

நூற்றெருமாவினில் வேற்றுமையில்லாமல் - விற்றிருக்கும்விந்துநாதமுங்கூடினல்-சாஸ்திரவேத சடாக்ஷரமந்திரந் தப்பாதுவயதுநூறுகாணுண்டையே - சித்திரமாளிகையில பத்திபிராணவாய்வுவித்துடனுதம் விளங்கியேமேவிடில்- சுத்தவான்யோகி சுகாதிதஞானிக-ளத்தன்செயல்நூற்றைம்பதுவயதுகாண் வயது (௨௱௪௮)

ஆறுப்பிருநிவுமோடிக்குறையாம - லங்குலம்பன்னிரண்டாகவும்பாய்ந்திடில் -நேராகுமொண்ணாநாழிகையோடிடில் - நிர்ணயம்வயது நூறுண்டையே தப்பாது - பாரதியும்பிருதிவியுமப்புவிற்பாய்ந்திடினும்விந்துநாதமுங்கூடிடில் - சிரதியுங்கிரியைவாசிவசமதாய்-சித்திபெறுவயது நூற்றைம்பதாண்டையே. வயது (௨௱௪௯)

அப்புவில்வாய்வதுமசைகின்றபோதினி - லங்குலம்பதினொன்றுகவும்பாய்ந்திடில்-மெய்ப்பாகவொன்னேகால் நாழிகையோடிடில்- மேதினியோர்கள்வயதெண்பதாண்டையே - ஒப்பிலாவப்புவிலோடியபானனு-மோங்கிப்பாய்ந்துவோராறுமீராறதாய்- இப்படிநாதவிந்தேகியிளகிடி- விதுவயதெழுப திருப்பதுமாண்டையே

கூறியவாய்வுபத்தங்குலம்பாய்ந்துக் - குறைந்துநாலங்குலமோடிக்கழிந்திடில்-மாறியமைந்தற்குவயதெனுங்கொஞ்சம் - வகுத்தேன்புவியிலுரைத்தேன்காணுண்டையே-தேறியபான னுதானனிடத்திற்-சிநேகிதஞ்செய்துவெட்டங்குலப்பாய்ந்திடில் - சிறுமஞ்சங்குலமோடிக்கழிந்தபின் - செய்வினைதந்தையால்பையவினை யாண்டையே. வயது (உ௨௪)

தேய்வினில்வாய்வு வசைகின்றபோதினில் - சேர்ந்தொருநாழிபத்தங்குலமோடிடில்-மெய்யுடல்விந்துவுநாதமுங்கூடினால் வீணல்லவயதுஆறுபத்தாண்டையே- பாயும்பிராணனபான னுஞ்சேர்ந்திடில்-பாவியேவிந்துவுநாதந்தொடங்கிடில்- மாயுங்கருவிமெவ்வேறதுவாகிப்பின்-மைந்தர்க்குப்பாதி மரணம்வந்தெய்துமே வயது()

சொல்லும்பத்தங்குல மோடியெட்டங்குலந் - தொக்கிச்சுழித்துச் சிதறிக்கடிந்திடில்- மெல்லியின்கெர்ப்பந்தரித்திடும்போதினில்விரைந்துவயது குறைந்திடுமாண்டையே- கொல்லல்செய்பிராணவாய்வுமெட்டங்குலம்- கூறிரெண்டங்குலநதுறியேபாய்நதிடில்வல்லியின்கெர்ப்பம் வயிறிடிகண்டு-மயங்கிவய துியங்கிடுமாண்டையே(

வாய்வினில்வாய்வுஅசைந்துறவாடிப்பின் - ஞழிகைமுக்காலொன்பதங்குலம்பாய்ந்திடில் - தாயினீர்நாதமும் வித்துந்தரித்திடில்-தப்பாதுவயது முப்பதாமாண்டையே - பாய்ந்திடும்பிராணன் வியானனுங்கூடிப்பின் - பாங்காய்நாதவிந்தி லாறுமுண்டங்குலம்-தாழ்ந்துநெட்டிட்டுக் கருவிலமைப்பதுந - தான்வயதுமுப்பத்தைஞ்செனு மாண்டையே. வயது (உ௨௫)

ஆகாசம்வாய்வு மசைந்துறவாகிடி - லானாழிவிந்துரெண் டங்குலம்பாய்ந்திடில் - சாகாதுநாதமும் வித்துந்தரித்திடுஞ்- சார்வாகு வயது முப்பத்தெட்டாண்டையே - வேகமதாகிய கூர்மன்திரணகிரி-விநதுநாதத்தினில் மிகுத்தெழுவங்குலம் - வாகமதாகியனாநாழிகைபின்பு-வளர்நதுபாய்நதிடில் வயதுகாணுற்பதே. வயது

அக்கினியாகியசுழியின்முனைதன்னி-லடர்நதுவாய்வுஅரையங்குலமோடிடில்-சிக்கியநாதமும்விநதுநதரித்திடுஞ்- சிதறிக்கருவிலுறைநதிடுமாண்டையே - தக்கபுகழுஞ்சுழிமுனைதன்னில் - தயவாகவாய்வுமிணங்கியபோதினில் பக்கஞ்சிதறியேபாய்நதிடிலும்பின்ட-பாகமாய்விநதுகளைநதிடுமாண்டையே. வயது (உ௨௬)

ஓடியேவாய்வதுடனேவிளை்நதிடி - லோமென்றநாதமும்விநதுநதரித்திடில் கூடியதிங்களொன் றாயதுக்குள் குழவிகளாந்துவெளியாகுமாண்டையே- நாடியேபக்கநால்வாய்வுஞ்சேர்நதிடில்- நாதமும்விநதுநயநதனுபோகமாய் - மேடியேதிலுமிகவுநதரித்திடில்-விபுலாய்களைநதுவிநதிடுமாண்டையே. வயது (உ௨௭

திக்கெல்லாம்வாய்வுசிதறிநடக்கையில் - செப்பரியநாதமும்விந்துந்தரித்திடில், கக்கல்திருவாய்வுதிங்கள்மூன்றுக்குள்ளே- கருவிகளைந்துவெளியாகுமாண்டையே - சக்கரம்போலுஞ்சுழன்றிடில்வாயுவுந்-தானிளைந்தோடிடில்நாதவிந்தாவதும்-பக்கமுதைத்துகெர்ப்பங்கரைந்தங்ஙனே - பார்க்கத்திங்கள்நாலின்மார்க்கமீதாண்டையே ()

உந்தியில்வாய்வுசந்துநெட்டிடி - லோங்காரநாதமும்விந்துந்தரித்திடில் - சந்தேகமில்லைதிங்களொன்றில்கெர்ப்பமுந் - தண்ணீராய்க்கரைந்துவெண்ணீருகுமாண்டையே - கூறியவாய்வுக்குறுக்கேசுழன்றிடில் - கொள்கையாநாதமும்விந்துமுதித்திடில் - மாறிடுமைந்தனீரொன்பதுதிங்களில் - மாளப்பிறந்தினிமாய்ந்திடுமாண்டையே. வயது (உஉக)

தூரியகுண்டலிவட்டத்தினுள்ளே - சுழித்திடும்வாய்வுமுதித்திடும்போதினில் - வேறில்லைகெர்ப்பந்தரித்துப்பிறந்தபின் - மெய்யாய்திங்களொன்றினி லுய்யவேமாண்டிடும் - தில்லைப்பதியெனுமெல்லையில்வாய்வு - செழித்துநடக்கையில்சேர்ந்துநாதவிந்து-வல்லமையாகத்தரித்துப்பிறந்தபின் - வருஷிமிரண்டிலில் மாண்டிடுமாண்டையே. வயது (உகூய)

செல்வஆணும்பெண்ணுஞ் சேர்ந்துரதிகேளி - சித்திரலீலைசெயில்செயவிந்துநாதமும் - தொல்லைமைந்தன்பிறந் தல்லல்வயதொன்றிற் - சொன்னேன்மடிந்திடில் சூதில்லையாண்டையே - வல்லமையாய்விந்துவாழ்பவித்தாகையால் - மாதர்மயல்கொண்டணுகிடாமல்மனம் - தொல்லைவாராதெனுந் திங்களோராண்டினில் - தோகையெனும்புணர்ந்தோர்களின்வல்லமை, வ்யது (உாகூ)

போதும்போதாதொரு வாண்டுதசையெனும் - போகிபோகமிதுபிசகாதிடில் - எதுவுஞ்வினையாகூத்தோர்சொலு - மேதுவினைப்பப னேதுபிணிவரா - மாதுபோகந்தசத்திங்களீளைஞ்சுதான் - வாததேகிவலுவாகுநூறுண்டுக்கும் - சாதுசாத்தியகுணதாலுவலுத்திடுந்தந்தையிந்தமதிமைந்தன்பிறவியே. வயது (உகூஉ)

விருத்தம்.

மூலமதில்வாய்வுநின்றிலகும்போதில் - முதலானநாதவிந்துதித்தநேர்மை, ஆலவிடங்கடித்ததுபோலாண்டுமூன்றி - ல்துவுயிர்போமைந்தன்மடிந்தாக்கைவேரும், ஞாலமுடன்வாய்வுசுழி சிதறிப்போடில் - நாதவிந்துதித்துவயதஞ்சில்மாள்வான், கோலமுடன்குண்டலியில்வாய்வுமோடில் - கொடியமைந்தன்வயதெட்டில் மாய்ந்தவாறே. (உகூகூ)

குறித்துநின்றுவாய்வுத்திக்கமலந்தன்னில் - குமிறியேநாதவிந்துதரித்ததாகில், வறிதாகுமைந்தருக்குவயதீரைஞ்சு - வாய்வுஞ்சுழிய

டங்கில்வய்திருபத்தைஞ்சு, பரியவட்டச்சுழினைவிட்டு விடத்தில்வா
ய்வு - பாய்ந்திடவுநாதவிந்து பதினாறென்க, நெறியானவாயுவிடை
யின்னிட்டேறில் - நிலைக்கின்றநாதவிந்திருபதாண்டே, (௨௩௪)

சங்குல்பகலற்றவிடந்தன்னிலேதான் - கருதிமுளையாடுகின்றநாத
விந்து, சங்கையில்லாரதிபோகஞ்செய்யும்போது - தாதுவிந்துசரு
வூரிலுதித்தசங்கை, இங்கிதமாயிடைகலையிலுதிக்கப்பெண்ணு - மிய
ல்பாகப்பின்கலையிலுதிக்கஆணும் - அங்கமதாயுபையத்திலுதிக்கமே
வும்-ஆணிரண்டுமொருவழியிலமைத்தவாறே. (௨௩௫)

எழுந்ததிருமண்டபத்திலிருந்தநாத - மியல்பானகருவூரிலுதிக்கு
ம்போதில், கொழுந்துமதியிடைகலையிற்பெண்ணேயாகும்-குறை
வில்லாபின்கலையிலாணேயாகும், வழிந்தெழுந்தவிருகலையிலுதித்த
தானால் - வசனித்தோம்பெண்ணுடனேயாணேயாகும், செழுந்தெ
ழுந்தசாதிவகையிரண்டுஞ்சொன்னேன் - ஜெகநாதர்கிருபையினால்
தெளிந்தநூலே. (௨௩௬)

உதித்திலகுநாதவிந்துவட்டந்தன்னி - லுட்புகுந்தகருவூரிலுதித்த
போது, துதித்திலகுஞ்சூரியனில்வாய்வுசேர்ந்தால் - சுழிகலையுமா
றினதாலிரண்டுமாணும், விதித்திலகுஞ்சந்திரனில்வாய்வுசேர்ந்தால்-
விகற்பமில்லாபெண்ணிரண்டுமுதிக்கலாகும் - கதித்திலகும்பலபல
வாய்தின்றதானால்-காற்றதினாலாகாதுரவியுமாமே. (௨௩௭)

கொச்சகம்.

வேதமறைக்கெட்டாதமிகுத்தகருவூர்வெளியாம்
நாதமுடன்விந்துவுநடுவணையிற்சேர்கையிலே
ஞாதாகுநாடிசிறந்துடித்தேவகுத்ததென்றால்
பேதமில்லையானால்பிறர்முகமும்பாராரோ. (௨௩௮)

சக்கரநின்றுடுகின்றசத்தமுயர்வீட்டிலொரு
சுக்குலசுரோணிதமுந்துய்யகருவூர்தனிலே
அக்கரமாம்பின்கலையுமசேர்ந்துதுடித்ததென்றால்
நிக்கினிபப்பெண்ணானால்திருட்டுமிகச்செய்வாரோ. ()

நிலையாய்சலையோதி நின்றதிருவீட்டிலொரு
அலையாதநாதவிந்து அணிவரையிற்சேர்க்கையிலே
அலையாமிடதுகலை துரியமதிலேயிரண்டால்
விலைமதிக்குமாணும் வெகுதிருட்டுசெய்வாரோ. (௨௪௦)

வெண்பா.

கண்டவெளிதாரகையில் சச்சிதானந்தமதில்
கொண்டலெனுநாதவிந்துகூடினால் - ஒன்றதுவும்
முட்டிசுழிநாடிமூன்றுந்துடித்தாக்கால்
வெட்டிமடிந்திடுவாரிவண். ௨௪௧)

அரியயனுங்காணாத ஆதிதிருநாதவிந்து
மரியதனுவிட்டில்வருமே - குறியாக
வளருஞ்சுழிமுனைதான் மாறிதுடிதுடித்தால்
கழுவிலுயிர்விடுவார்காண். (௨௪௨)

கலித்துறை.

மறியாதவீட்டிலதிபோகஞ்செய்துமனமகிழ்ந்து
பறியாதநாதவிந்துங்கூடிமெய்பயிராகியபின்
சறியாகதின்றுசுழிமுனைநாடித்தயங்கினதால்
செறிவேறுமில்லைவெகுநோய்கள்கொண்டுகிடந்தனரே. (௨௪௩)
கருத்தையிருத்தியனுபோகமாய்க்கைகலக்கையிலே
மருத்தெழுநாதமும்விந்ததுங்கூடிமருவியபின்
அறுத்திடும்வாசலப்பாற்சுழிமுனையசைந்துதென்றால்
தரித்திடுமைந்தர்சுரம்வந்துருழ்ந்துதயங்குவரோ. (௨௪௪)

விருத்தம்.

வையமெனும்பதினாலுவுலகுக்குள்ளே - வகுத்தெழுந்தஜாதிகுலமாண்பெண்ணொண்டும், சையோகஞ்செய்கையிலேநாதவிந்து - தரித்தகெர்ப்பந்தனக்குவயதுரைத்தேனகேளீர், குய்யமெனும்வச்சிரப்பைதனில்வளர்ந்த - குழவியர்க்கேவயதுநின்ற குறியுஞ்சொன்னேன், மெய்யெனவேயோடுகலைநாலினாலே-விளைகின்றபொருளையெல்லாம்விளம்புவேனே. (௨௪௫)
சுழியெழுத்துமரியெழுத்துமிரண்டுங்கூடி - சுக்கிலமேசிவயமெனுஞ்சொல்லும்போது, சுழியெழுத்துநாலதினாலுலகமாச்சு-கனகசெகசாலமெனுங்காட்டிவைத்து, வெளியெழுத்தாம்அவ்வதிலேஉவ்வுங்கூட்டி - விளங்குகின்றகுண்டலியிலுதிக்கும்போது, குழியெழுத்தில்வளருகின்றமைந்தர்க்கெல்லாங் - குருடுசெவிடானவகை கூறுவோமே. (௨௪௬)
தப்பாதுகருவூரின்வெளியிலேதான் - தாண்டியுயிர்நாதவிந்துவிதிக்கும்போதில், வெப்பதிதசப்பாணிதொண்டியாக- விதிக்கின்றகருவியிலேவிளங்கும்வாறும்,ஒப்பதிதவொருகாலுமொருகைநொண்டி-யோங்கியொருபுறமுமூடலுதிக்குநேர்மை, கற்பானகலைநாலிலவகுத்துநின்ற-கருத்தையுமேயின்னதென்றுகாட்டுவேனே. (௨௪௭)

அவயவங்குறையுமுறை-தரு.

வித்தில்வின்னமெய்துமாண்டே-இனி
வினைப்பயனருளுவேனுண்டே
தோத்திரத்தோடுதொக்குந் துடராதேதுண்டித்துப்போனால்-அகம்-வேற்றுமையாயுடல்வேறுகூறுகிடுமாண்டே - மாத்தியசட்சிங்குவையாக்கிருணமருவாதேபோனால் - அந்த-வேற்றிடுநாக்குமூக்குவிழியுங்குறையுங்காணுண்டே. வித்தில் (௨௪௮)

சத்தபரிசரூபந்தானதுஞ்சாராமற்போனால்- மதி - வெற்றிச்செவிட்டனேகுருடும்விவேகமில்லாதாண்டே - புத்திரசமுங்கெந்தம் பொருந்தாமற்போய்விடுமாகில்-வாக்கு- எத்தனைசொன்னாலுஞ்செவியிசைவுபடாதுஊமையாண்டே. வித்தில் (௨௪௯)

ஞாக்கியரசமுங்கெந்தந்தொந்தித்திராதேனுமாகில்-உடல் - நோக்கியகைகாலும்வாய்நொடிக்குச்சப்பாணியாமாண்டே- வாக்கியபாதமும்பாணிவது வுபஸ்தஞ்சேராதென்னில்- லிங்கம் - ஒங்கியசரனையற்றவொடுக்கங்கொண்டிடுங்காணுமாண்டே. வித்தில் (௨௫௰)

வசனங்கெமனந்தானமதுவுஞ்சோராதிடில் - என்னில் - வார்த்தைமசக்கல்தடத்தலெனில்கொடுத்தல் வாராதுகாணாண்டே - விசர்க்கமானந்தமிரண்டுஞ்சேராதிடில்காணும்-மூல - மிசக்கல்மலசலமும் விடுவித்திடாதுகாணாண்டே. வித்தில் (௨௫௧)

மானமாங்காரஞ்செயலும்வசனித்திராதிடில்வாதாம்-கன-நினைவைக்கொண்டுவிசாரித்தியல்புகோபத்தைப்போக்குமாண்டே, செனனசித்தமுயர்ச்சிசித்தமுடனும்வேறாய்ச்-சிதறி - இயல்புதினமுமதியுமன்புத்தயவுங்குறைந் திடுங்காணாண்டே. வித்தில் ) (௨௫௨)

பரிவாகிடுதல்நெஞ்சமறிவொன்றதுஞ்சேராதேபோனால்- இந்தப் - பரியாசம்புவியதனில்பாரிலொன்றுநடக்காதாண்டே - சிறியத்துரியகலைசுழியிற்சோராதிடினும்போனால் - விழியும் - சிதறிச்சுருங்கியிருமுழிபுக்கலங்கிடுங்காணாண்டே. வித்தில் (௨௫௩)

இடையின்கலையுஞ்சுழிமுனையுஞ்சோராதிடினும்வேறாய் - இன்பமிடறுங்கூனாய்குருடாய்முறடுமொண்டியுமாகுமாண்டே - திடசிங்குவைபுருடனிரண்டுஞ்சோராதிடினுமாகில்-அன்னம்- திடப்படாதுசெவியுஞ்சிமிட்டிடாதுகாணாண்டே. வித்தில் (௨௫௪)

காந்தாரியந்திரண்டதுங்கலந்துறவாடிடாதாகில்-நல்ல - கந்தமுஞ்சத்தஞ்செவியுங்கருதாள்குறைந்திடுகாணாண்டே - சுந்தரவலம்புருடன்சங்குனிரெண்டதுஞ்சேராதாகில்-இந்த-மைந்தனிடதுதாள் வாய்தாதுலிங்கக்குறையுமாண்டே. வித்தில் (௨௫௫)

பேதகமாகியக்குரோதன்பின்புசேராதிடினும்போனால்-பித்தம்-பிதற்றுஞ்சுரனையற்றுப்பிறியுமறிவுசொக்குமாண்டே - போதகப்பிராணனபானன்வியானனுஞ்சோராதிடினுமாகில்பிரியா - பேதித்துவன்னமுமலம்பிறித்துவிடாதுகாணுமாண்டே. வித்தில் (௨௫௬)

உதானனுஞ்சமானன்கூர்மன்னுகந்துசோராதிடினுமாகில்- சலம்- இதக்கமில்லாமல்மனஞ்செலுத்தேப்பமிடுட்பிக்குமாண்டே - ஞுதனந்திரிகரனுமாறியேசோராதிடினுஞ்சேர்ந்தால-பார்லை |- நீதவிழிமாறிடுஞ்சாதனையிதாகிடினுமாண்டே. வித்தி (௨௫௭)

சத்தமுயிர்தேவதத்தன்வித்திலுஞ்சேராதிடிலுமாகில்- நல்ல-புத்தியுங்கொட்டரவிவிக்கல்நகைப்புஞ் சிரிப்பில்லைகாணுண்டே - மத்தவத்தனஞ்செயனுமவ்விடம்விட்டதுசேராதாகில்-சுத்தம் - வித்தையும்புத்தியுங்கள்விழிலாமுள்மாந்தபித்தமாண்டே.வித்தில் (உருஎ)

வாய்வருவுமீலாஞ்சுவளர்பிறையுமீரொட்டுமோடில் - வாசி-தேய்பிறையுமீராறுதேறநாடியுந்தசைமாறி-கலை - பாயுந்தேகாதிதேகம்பகிரண்டங்களாவிபாய்த்தும்-அமைத்திடும் - நோய் மூழ்வினைமீதிநோக்குங்காசமோடிசாடிவினை. வித்தில் (உருஅ)

விருத்தம்.

மருவுயருங்கைலைநகரண்டவீதி - மறையிலங்குந்திரைகடந்து நாதவிந்து - உருவுயர்ந்தபதின்மூன்றுங்கோட்டின்மேலு -மோங்கியொருதுளியிறங்கிதிரண்டுமேவி - கருவளரும்பெருகுநதிக்கப்பாலேதான்- கனகரத்நவீட்டிலொருவீடுகட்டி, குருவிருந்தமண்டபத்தில்குடிநானேறி-கூடிநின்றகுறிகளெல்லாஞ் சொல்வேனுண்டே.

ஆதியென்றநாதவிந்தலைந்தவாறு - மளவற்றகருவிலுருதரித்தவாறும், நீதியுடனின்றுவயதுரைத்தவாறும், நிலைமையில்லாக்கருக்கலைந்துநின்றவாறும், வீதியிலேபிறந்தெழுந்துபோனவாறும்- விவரமதையின்னதென்று விதித்தவாறும், பாதிமதிசடைபணித்த பரனேபோற்றி-பத்தியுள்ளபெரியோர்கள்பாதப்போற்றி. (உசுய)

வடிவெழுதிமுடியாதநாதவிந்து- மாறியுயிர்கலைபிறிந்துபரத்தில்மேவும், முடிவிலொரு மலரொனவேபூத்தவாறு - முனைசாய்ந்துவாடாமல்பி சின்வாறுங்- குடிலமெனுநடுவணையில்கருக்குள்வாறுங் கூடியிருகால்வாங்கியடியிற்பாய்ந்து - மடிமீதில்கருவியெனும்வீடுண்டாக்கி-வகைவிவரமாகவெல்லாம்வகுத்தேனுண்டே. உசுக)

உருவெடுத்துவந்தவரலாறுஞ்சொன்னேன்-ஊமையெனுஞ்செவிடான துருவுஞ்சொன்னேன் - கருவுதித்துநின்றசைவு வயதுஞ்சொன்னேன்-கலைபிறிந்துமாறுகின்ற கருத்துஞ்சொன்னேன்-துருவெடுத்தபூரகத்திலுதித்துநின்ற - துயரமெல்லாம் விவரமுடன்சொன்னேன்காணும், அறிவறிந்தபெரியோர்கள்புவியின்மீதி - லவர்மகிழவவனியுள்ளோரறியத்தானே. (உசுஉ)

விற்பனமாத்துருவவெளிக்கப்பால்நின்ற-மேலானசகலகலைநாவினாலே-இப்பாரிலுதிக்கின்றமைந்தர்க்கெல்லா - மியல்பானவறமைநலமிகவுஞ்சொன்னேன்-கற்பானகற்பனையாலெழுந்தபாண்டங் கருவிலுயிராகிநின்றகருத்துள்ளோர்க்குச்- சப்பாணிகூன்குருடாயானநேர்மை-சாதகாயானறிந்து சாற்றினேனே. (உசுங)

கொச்சகம்.

நாற்சதிரமண்டபத்தில்நவ்வுமவ்வும்ரெண்டிருநது
தீச்சுடராமூட்டிமேயதால்செங்கமலவீடதனில்

பேச்செழும்பாதகக்ஷரத்தில் பேசவுருவாய்ப்படுத்தி
காச்சியுருக்கியொரு கருங்குகையில்விட்டனரே. (உகூச)

விட்டகுறைதன்னிலொரு விதகுறையாகாமல்
நட்டுவிளைவித்தேனே நடுவணையிலேயிருந்து
முட்டியெழுந்தமுனை மூலசுழிநால்வரையில்
கட்டியுருக்கியதில் கருத்தால்வளர்ந்தேனே. (உகூரு)

உள்ளிருந்தகள்ளரையு முனெடுத்தநேர்மைகளும்
புள்ளிருந்தவாழ்மனையிற் புகுந்துரைத்தவாழ்தல்களும்
தெள்ளிருந்ததீவினையந்தேகமுதித்தாக்கையதும்
வள்ளலெனுமம்பிகையின் வாய்மொழியாற்கண்டேனே. ()

கலித்துறை,

தாக்கிப்பொருந்தையல மூலத்தினுதமுந்தாதுவிந்தும்
நோக்கிக்கலந்தவுருவாகியனுனியூசிவழி
நீக்கிப்புகுந்தகலைநாசியாறு நிரந்தரமாய்
வாக்கினுயர்ந்தகனியாகி நின்றுவளர்ந்தனனே. (உகூஎ)

கருத்திலிருளையகற்றிவெளியிற்கதிர்மதியில
விருத்துவகுத்துவிவரமதாய் வெற்றியாகவேதான்
வருத்தமிலலாமற்சுழிவிட்டுவாசலமதிநடுவில
ஒருத்தனுமாகிவெகுஞானங்கொண்டுதிக்கின்றனனே ()

இருளையகற்றிமருளைவிலக்கியேகாக்ஷரத்தில
பொருளையடுத்துப்பயனறிந்துள்ளம்புவனம்விட்டு
அருளையடுத்துஅறைவிட்டிலோட்டியடைத்துவைத்துத்
துளிரைவளைத்துத்தெவிட்டாக்கனியுண்டுறங்கினனே. (உகூக)

வெண்பா.

முக்கோணச்சக்கரத்தில முப்பாழுக்கப்புரத்தில
சட்கோணவிட்டுத் தலையடியில்-அக்கோணம்
வெளியிலவளர்ந்தருளும் வெங்கதியான
குழியிலவளர்ந்தகுழவி. (உஎ0)

வாசிகட்டிப்பந்தடித்து மாறியிருகாலால
நேசமுடனேபிடித்து நின்றறிந்து-ஓலசதனில
ஆதிச்சிலம்பொலியை யண்டந்தனிலெழும்ப
நீதியுடனேவளர்ந்து நின்றேன். (உஎக)

ஒட்டும்பலகையொருசாண்சிறவீட்டில
முட்டிவளர்ந்துமுனையடியில்-நட்டு
அனந்தகம்பத்தடியி லகத்தியனேகண்டு
இன்பமுடன்யான்வளர்ந்தே னினி. (உஎஉ)

## விருத்தம்.

இப்படியேவிழிமடவார்கெர்ப்பத்துள்ளே - யினிவளர்ந்தநேர்மையெல்லாமியம்புங்காலை, எப்படியுத்தப்பிதங்களின்றிவாராமல் -என்னுலேயறிந்தமட்டு மியம்பினேன்காண், சொற்படியுஞ்சுழிமூலவீட்டுக்குள்ளே-துகையானகருவினின்றசூக்ஷாசூக்ஷம், இப்படியேவகுத்துரைத்தமைந்தர்க்கெல்லாம் - இனியமுறையிப்புவியி லியம்புவேனே. (௨௭௩)

பத்தானதிங்கள்சென்றுபிறந்தபாலன் - பாக்கியமனுபவித்துபரதேசியாகி, விஸ்தாரமானபரிகரியுமேறி - விட்டகுறைதவிர்ந்துடனேயிரந்துவுண்ணும், ஆஸ்தானதிரவியத்தில்வாழ்ந்துமாறி-அதுகடந்துவையமெடுத்ததுவுமுண்டு, சித்தாடுகின்றசிவயோகியாகித்-திரிந்தவகையறிந்தமட்டுஞ்செப்புவேனே. (௨௭௪)

ஒருத்தனவன்கருத்தாலேபுலகமாள்வன் -உகந்துலகில்வாழ்ந்துயிருந்துண்டுவாழ்வன், பெருத்தொருவன்புவியாசைப்பிறித்துக்கொள்வன் - பிராணன்வெறுத்தகமீறிப்பிதிர்களாவன், தூரத்தினங்கள்செய்துபெருஞ்சிவிகையேறி, சுவைமாறிசிவயோகஞ்செய்துவாழ்வன், வெறுத்திந்தச்சபைதனிலேயாண்டேகேளீர் - விவரமெல்லாம்வெளியாகவிளம்புவேனே. (௨௭௫)

சுந்தரஞ்சேர்நாதவிந்துமூலந்தன்னில் - துளிபெருகியொருமடையிலோடும்போது, அந்தமில்லாமுகப்பேதமானவாறும் - அழகுமஷ்டவயிஸ்பரியமமைத்தவாறும், சந்ததமிமூனாத்தவர்கள் கற்றோர்வாறும்- சந்நியாசிதவசிகளாய்ச்சார்ந்தவாறும், கந்தமலர்ப்பூங்குழலைவெறுத்துநின்ற-காரணத்தையின்னதென்றுகருதுவேனே ()

அறிவறிந்துமனுபோகஞ்செய்யாமான்பர் - ஆதிவிந்துநாதமென்றுமறியாமாண்பர், கருவறிந்துபொறியடங்கிச்சித்தரானூர் - கருத்துமனம்சொண்டாகி யோகியானூர், திருவுடனேசேராமல்ஞானியானூர் - தேசமதில்பூசைசெய்யுஞ்சைவரானூர், குருவுடனேசிஷனென்றுமிருவரானூர்-குறிப்பறிந்துபிண்டமதிற்கூறுவேனே. ()

அலையாமல்பசியறிந்துவுண்ணும்பேரும்-அனுதினமுந்துயரமதிலழுந்தும்பேரும், நிலையாமல்நினைவுதடுமாறும்பேரும் - நித்திரையில்பயந்தெழுந்துநின்றபேரும், துலையாமலுலகமெல்லாந் திரிந்தபேரும்-சோர்ந்துமொருசந்திதனில்மடிந்தபேரும், மலையாமல்போர்க்களத்தில்ஜெயித்தபேரும்-வகுத்தவிந்திலுதித்தவகைவசனிப்போமே. (௨௭௮)

மந்திரங்கள்கல்விமிகக்கற்றபேரும் - மகத்தானசாஸ்திரங்கள்வகுத்தபேரும், சிரதையெனுங்கிரியைதனிலிருநதபேரும்-செகசாலமிநதுலகில்வாழ்நதபேரும், அநதமெனும்யோகமதி லடர்நதபே

ரும்-அனுதியெனுஞானமறிந்தமைந்தபேரும், இந்தவகையிப்படி யே யானவாறும்-எனையீன்றகுருவருளாலியம்புவேனே. (௨௭௯)

இடையின்கலையினளவு-தரு.

ஆறுறமைத்தவிதியாண்டே-கருவூரினில்
யானும்விதித்தவிதியாண்டே.

பார்தனிலேகருவூர்பாலனமைத்தவிதி - சீர்பெறுஞ்செல்வமுண் டானசெய்தியைச்சொல்லுவேனுண்டே - தாரணிதனிலேதந்தைதா யுமிருவர்கூடிசருவிரதிகேளிதானுடியம்போதினில். ஆறு (௨௮௰)

ஓடுங்கதிர்மதியுமொன்றுடனிரண்டும்வளர்ந்தால - நீடுலகும்புவி யிலவாடுவார்வறுமைகொண்டு - ஓடுமதியுங்கதிரோடியொண்டொன்று பாய்ந்தால-வீடுமிழந்துவையமேலுநதரித்திரவான்காணும். ஆறு()

முதலமூன்றும்பூரணச்சந்திரன் - விதமாயமைக்குமைந்தன்-சுத னருள்கலவியும்பாக்கியம் கலைபதினுமெறனில- அத்துவுமலலாமனுவி லருணன்சோமனுங்கூடில,- விதியமுறையிலமைந்தன்விவேகியோ கவானுண்டே. ஆறு. (௨௮௨)

நாலுகலைபிரியாரவிதன்மதிவளரில - பாலன்தனக்கெநாளும்வா லப்பருவங்காணும் காலையிலபாலன்னஞ்சுவைசுகியோடதுமாறுதி காலனுகாதஷ்டகனயோகயோகவான்காணும். ஆறு (௨௮௩)

வஞ்சிகெர்ப்பந்தனிலேவளருமதிபஞ்சானல - மிஞ்சும்புகழ்பா க்கியங்கொஞ்சட்போகவானுண்டே - ரஞ்சிதக்கருக்குழியிலாதலால மதியாறுனல - செஞ்சொலுப்பார்தனிற்காணி செழிக்கும்பதியுண் டெனில. ஆறு (௨௮௪)

மாதுவிழிமடவாள்வதிகுலகெர்ப்பந்தனிலுந -தாதுமதியேழெ னில்தன்மைத்துவாழ்வார்கள்செலவச்சாதனமிதுசப்பாகுநாதவிந்தா லரேகப்-பேதாம்பேதங்கள்கோடிமேதினியோர்களிவ்வாறு. (௨௮௫)

விருத்தம்.

கங்குநதிநகரிலகுங்கருவூர்நாட்டில - கதிர்மதியாலெடுத்தபலன் கணக்கதாக, மங்கையுடலமாதுகெர்ப்பந்தனிலேவிந்து - மகிமை யதாயவதரித்த வண்மையெலலாம், சிங்காரமாகவெந்தன் தெளிவி னலே - திங்கள்பத்திலுதித்தமைந்தன்செயலேகண்டு, செங்கமலம னையம்பிகைப்பெண்மாது - செப்பிடிலுங்கருத்தையினிதெளிவி ப்பேனே. (௨௮௬)

புண்டோற்பத்தி-தரு.

தெந்தினதினதினனு-தினதின-தெந்தின-தினதினதினதினனு.
திட்டமுடன்வெட்டவெளியில-சலையெட்டில - செனித்தருள்கெர்ப் பமதினுற்பவத்தைக்கேள்/- வட்டமதிவிட்டகுறையால-செல்வமதி வளர்ந்துநதிருமுகம் விளைநதிங்கரண் - அஷ்டதிசையம்பரத்தி

லே - சுழியின்முனை - ஆதாரகுண்டலிதனகத்துக்குள்ளே-விட்டமதி யொன்பதிலே-விந்துதரிக்க-விஜயராசாங்கயோகவாசஞ்செய்வார்()

உதித்தபெருந்துறைமூல - மூத்ததக்குழியி - லுற்பனமாகவே கெர்ப்பந்தரித்துதென்றால் - பதித்தசமதிலுதித்தல்-விந்துசிவ-பாருலகிலஷ்டசித்துமாடிடுவோர்காண்-விதித்தவிதியதிபாத - கருக்குழிதன் - விந்துயிலுநாதமதுமேவிடிலுமே -பதித்தமதிபதினொன்று லஷ்டசுக:பாக்கியசிவயோகராசயோகியிவர்காண் தெந்தின (உஅ)

எண்ணிரண்டாங்கோட்டிலிலே - சுரோணிதமென்-திருக்கின்றநாதமெனுமுதிக்கையிலே - பன்னிரண்டில்பதியானு - லிப்புவியில்-பாராளுந்துரத்தினஞ்செய்தரசாள்வார் - உன்னிதச்சுழிமுனையிலே - கெர்ப்பந்தரித்து - உற்பனமாகவேமதிபதிமூன்றானால் - இன்னிதராஜாங்கந்தனில் - மந்திரியாகி - யேகசக்கிரவர்த்திகட்குயோக்கியவான் காண். தெந்தின (உஅக)

மதிசந்திரன்பதினாறில் - கெர்ப்பந்தரிக்க - வந்தவதரித்தமைந்தன் விந்துபலன்கேள் - பதிகருவூர்தணவிட்டு - அப்புவியில்-பாலகனவதரித்தால்ஞானியாவார்காண் - மதிரவிநடனஞ்செய்யும் - பூர்வக்கியான - வாசிவசமாகும்ரசவாதமுமெய்தும் - அதிவிதயோகதிசைவான் மறுபிறவி யாதலாலாண்டவன்செயலமைப்பிதுவே தெந்தின ()

பாதகஞ்செய்திடுங்கருவூர் - அவ்வூரினில் - பதிக்குள்மைந்தனுதிக்கப்பலனதுகேள் - மூவஞ்சுமதியானால் - அம்பதியில் -முக்குணமதாகிவளர்சற்குணவான்காண் - மேவுங்கருவூர்தனிலே - கெர்ப்பந்தரிக்க மேதினிதனிலேமைந்தன்விதிவந்தபின் - பூவுலகில்மூவுலகுமே - சர்த்தவ்யமெனும்-புகழுடையமும்மூர்த்திபரஸ்பரன்காண். தெந்தி ()

மருவுயர்திருவீட்டில்-கருவூரினில் - வந்துதித்துமைந்தர்களும்வருப்போது-பெருகியமதியொட்டில்-உதித்திலகும் - பிரபஞ்சமுழுதந்திரைக்கடலுலகுங் - கருவியிலுதித்தபலன் - இப்புவிதனில்-கனயோகச்சித்தகர்த்தனிவர்காண் - அருமறையோர்புகழும் - அம்புவிதனில்-அஷ்டஅவதானியெனுமனைவர்தொழும். தெந்தின (உஅஉ)

இந்தமதிவிந்துநாதமு - மிரண்டுகூடி - என்னுடையதந்தையுடனன்னைசேர்ந்திடில்-மைந்தனுயசருக்குழிதனி - லவதரித்து-வந்துதித்தபாக்கியமினிவிந்தையாய்சொல்வேன் - விந்ததிக்கும் விட்டகுறைகாண்-இந்தமதி - அந்தணர்முனிவரெல்லாம்வந்துதித்தனர் - செந்தமிழ்க்கவிதையாய்ந்தனர் - ஞானப்புலவு - ரைந்துபூதமைந்த தெளிந்தவராண்டே. தெந்தின (உஅங)

விருத்தம்.

காரணத்தால்நாதவிந்து கருவூர்தன்னில் - கலந்துவுருவாகிவந்த கருத்தையெல்லாம், சீர்படைத்தபுவிதனிலேவகுத்துயானுந் - தெளிவாகத்தெரிந்திடவே செயலாய்ச்சொன்னேன், வாரணமாஞ்செ

ங்கமலவீட்டுக்கப்பால் - மாறுகலைநாலதுவால்வகுத்தநேர்மை, பேர்படைத்தபதினாறிலொன்றுபோனால் - பெருலகில்தவசியெனப்பிறப்பாராண்டே. (௨௧௪)

குருவிருக்குமுப்பாழுக்கப்பாலேதான் - குய்யநமையைத்தின்குறிப்புகளுள்ளே, கருவுறையுநாதவிந்துகலைக்கும்போது - கதித்தகலைமதிரண்டுகுறைந்ததாகில், விருப்பமுடன்பார்தனிலே பிறந்தபின்பு - விளங்குசெல்வம்பாதியிலேகழிந்துபோகும், பருவமுள்ளபதின்மூன்றுக்குறைந்ததாகில் - பரதேசியாகிடுவார்பாரிலாண்டே. ()

சிறுபிறைக்குள்திணாமறைந்தசிறந்தவீட்டில் - சித்துவித்தைகல்விதருநாதவிந்து, ஒருதுள்கொண்டிருதுளியிலுறையும்போது-உதித்தகலைநாலதனாலாண்டியாவார், தருவணையுங்கலையுமைந்ததானதுகேளீர் - சாந்தநற்குணமழகுஞ்செல்வமெட்டாம், பெருமையெனுமாறிலுஞ்சந்நாசியாவார் - பேர்பெரியவேழினிலுமிருதியாண்டே. ()

வட்டமதியெட்டுகலைகுறைந்ததாகில் - வகுத்தவுடல்பெருத்திருக்கும்வளர்ச்சியுண்டாம்,விட்டமதிகலையொன்பதுங்குறைந்ததாகில்- வீறுகப்பிறந்துவளர்ந் திரந்துண்பார்கள், சட்டமதிகலைபத்துங்குறைந்ததாகில் - சாகுநாள்பரியத்தந்தரித்திரனவார், தொட்டகலைநீங்கிவிடாதிருக்குமாகில் - தொல்லுலகிலுள்ளவர்களறிந்திடோ (௨௧௭)

வடிவுகொண்டதிருமூலத்திணாக்குள்ளேதான் - மருவுகின்றநாதவிந்துவமைத்தபோது, முடிவுகின்றமதிகுறைந்துட்பதினொன்றாகில்-முதலானவாழ்வுயிருமீயாமூடர், மிடிகொண்டுவிருளகற்றிவளர்ந்துமென்மேல் - மேலானமதிகலையுமீராறாகில், குடியிருக்குங்குறைவில்லாதாச்சுதாகில் - குவலயத்திணற்பதிமேலசித்தராண்டே. (௨௧௮)

சிவ்வெழுத்துமவ்வெழுத்துமிரண்டுங்கூடிச் - சிறந்திருந்தஅவ்வெழுத்தில்வவ்வுஞ்சேர்ந்து, நவ்வெழுத்திலுதித்தருஞமைந்தர்க்கெல்லாம் - நயந்துசரிவாழ்த்தினபின்னிரந்துண்பார்கள், வவ்வெழுத்துநவ்வெழுத்துமிரண்டுஞ்சேர்ந்து - மகிழும்யவ்விலமவ்வெழுத்துஞ்சிவ்வுண்டாகி, இவ்வுலகிலுதித்தருளும்பாலர்க்கெல்லா - மின்யசரிபாதியில்வாழ்ந்திரந்துண்பாரோ. (௨௧௯)

## கொச்சகம்.

துரியாதிதவீடதனில் சொற்பனத்துக்கப்புறத்தில்
மரியாதெழுந்திரண்டும் வந்தேசலக்கையிலே
விதியாய்வளர்ந்தமதி விண்மேணயம்பரத்தில்
பதினால்குறைந்ததென்றால் பார்மீதில்வாழ்வாரோ. (௱)

வாழ்ந்துசமர்த்தாகியபின் வான்புவியிலுள்ளமட்டும்
தாழ்ந்தகுணவிந்திதமாய் சாவுமட்டுந்தாரணியில்

சூழ்ந்துலகத்துள்ளிருந்து துய்யகருஆத்துமத்தில்
ஆழ்ந்துமறைநூல்பார்த்து அம்புவியில்வாழ்வாரே. (கூஈக)

கருவூர்வெளிதனிலே கமலமலர்நாதவிந்து
விருவாந்துருவமதில் மெய்கலந்துநிற்கையிலே
அறிவாகமூவஞ்சு மானமதிதான்குறைந்தால்
குருவுடனேசிஷனுமாய்குவலயத்தில்வாழ்வாரே. ()

சுத்தியருள்புத்தியதாய்சுசந்ததிருநாதவிந்து
உத்தெழுந்துருக்கலந்துவுற்பனங்கொண்டுறையிலே
முத்துளித்தேனிந்தமதிமூவஞ்சுமேழித்தால்
பத்திதருமந்திரமும்பலகலையும்பார்ப்பாரே (கூஈங)

வெண்பா.

மறிவிகலவித்தெளிவு மாறியுயர்நாதவித்து
கருவியுறவாகக்கலக்கையிலே-பருவமதாய்
நின்றுவளர்த்தகலை நேரில்பத்தாறுங்குறைந்தால்
கண்டுகொள்ளுந்தரித்திரவான்காண். (கூஈச)

சண்டவெளிதாக்கையிலே தாவித்தநாதவிந்து
அண்டமதைத்தாண்டியணுகினல்-மண்டலத்தில்
சாவளவுமேவறுமைதரித்திரத்திலேயழுந்தி
மேகவினைசூழ்ந்திடுங்காண்மேல். (கூஈரு)

கலித்துறை,

கலையேபகுந்துமெய்ஞ்ஞானசோதிகருத்தினுள்ளே
நிலையேகெதியென்றுநின்றுகொண்டேநெடுங்காலமெல்லாம்
புலையேதிகழ்த்தியுமையம்பிகையிருபொற்பதத்தில்
மலைவேவகற்றிப்பதிமேலுநின்றுவணங்கினனே (கூஈசு)

ஆறுகும்பிஞ்சுசுழிமுனைவாசல்சிறுவீட்டுக்குள்ளே
மாறுதவிந்துவுநாதமுங்கூடிமருவையிலே
பேறுகநின்றுமதிநாவிலம்பிகைப்பேசிநின்றால்
ஆறுலிங்கமுநாதாந்தயோகியம்பரமே (கூஈஎ)

குடிகொண்டுமாதர்மாயக்குழிதனிற்கொண்டுமணம்
படிகொண்டுநின்றுவளர்ந்துகொண்டேன்மதுபானத்திலே
அடிகண்டுபோற்றியம்பிகைப்பாதமருள்புரிய
முடிகண்டுநின்றுவணங்கியேகாக்ஷரமூலத்திலே (கூஈஅ)

விருத்தம்.

மதுரமதுவொருபுரமாய்ச்சேர்ந்தவீட்டில் மதியமிர்தம்தின்றி லங்குமூலவீட்டில்- கதிருதையசெகச்சோதியானபீடங் - கனகரத்ந நாதவிந்திரண்டுங்கூடி,சிதருமலொரு முனையிலுதித்து மேலுஞ்செ டமெடுத்தமார்க்கமினிசெப்பக்கேளீர் - பதருமல்யானருளபெரி யோர்பாதம்பணிந் தின்நூல் பெருமையெல்லாம்பகர் வேனுண்டே

மந்திரமுஞ்சாஸ் திரமும்பிறந்தவீட்டில் மறைநூலைவிதிங்தவய ன்வாழ்ந்தவீட்டில் தந்திரமாய்சர்வவுடலெடுத்தவீட்டில் சதாசிவமு நடனம்புரிந் திருந்தவீட்டில்- சுந்தரஞ்சேர்நாத விந்து தித்தவீட்டில் தருத்தியுடற்குள்ளு மொருவுடலாய்நின்ற - இந்திரன்றன்பதிக்குமேலறை வீட்டுள்ளே இப்படியேயென்னுடல்தான் சமைந்ததாண்டே. (௫௱௰)

கருவினுடலெடுத்த விதக்கருத்துஞ்சொன்னேன் காரணமாய்க்கருவிநின்றகணக்குஞ்சொன்னேன் - மருவியுறவாகிநின்ற மைந்தர்க்கெல்லாம் வயதுகுறை வாகிநின்றமார்க்கஞ் சொன்னேன் - பெருகிநின்றசலைகுறையுமிரண்டுஞ்சொன்னேன் பிறந்துலகில் வாழ்ந்திருந்த பெருமை சொன்னேன் - குருவுடனேசேஷனுற வாகிநின்ற கூர்மையறிந்தெந்திரத்திற்கூறினேனே. (௫௱௰௧)

சித்துவிளையாடு நவரத்ந பீடஞ் சிறந்தசத்திவல்லபை தன்னருளினாலே,வித்திருந்தவிடமறிந்து வகண்டஞ்சொல்லி, வேதமறியாதவுடல்வகுப்புஞ்சொல்லி - கொத்திருந்து குலைசாயுந்தலமுஞ் சொல்லி குருவான நாதவிந்தின் கூறுஞ் சொல்லி - முத்து தித்தசிறுவீட்டுக்குள்ளேயிந்தமுறைப்படியேகருவியெல்லாமுடிந்ததாண்டே (௫௱௰௨)

தன்னிணைவைத்தானறியுநாதவிந்து தரிசனத்தை யாட்டியதுமேலும் பூட்டி, உன்னினதால் யானுமொருசடலமானேன் உறுதுணையானேனுந்த னுந்திக்குள்ளே - என்வினைவையா னறிந்து கருவூர்நாட்டில்இப்படியேசிறுகுழந்தையாளுமானேன், முன்னிணைவைததவிர்ந்ததந்தமூலத்துள்ளே முடிந்தவகையிவ்விதங் காணுச்சுதாண்டே

தாங்கிநின்றகருவிதுக் குள்யானும்வந்து தரித்தபின்பு அன்னையென்னைச்சடத்திலேதான் - பாங்கதுவெனைச்சுமந்த ஆத்தாளுக்குப் பளபளப்பந்தள தளப்பும்பாரின்மீது - ஓங்கியொரு அடியெடுத்து வைத்த போது-உள்ள மெல்லாம்வேதனையால் நொந்துவாடி,சாங்கியமுந்திங்களொரு ஐந்துக்குள்ளே சாதகமாய் முடிந்த வகைசாற்றுவேனே.

நடக்கையிலேயிருகாலு மசைவுஞ்சேர்ந்து நாவிலிந்தவசனத்தையுரைக்கக்குன்றி- படுக்கையிலே யொருபுறமாய்ப் புரண்டுருண்டு பத்தாவைக்கண்டவுடன் பார்க்குங்காலை - முடக்கையிலேமேனியெல்லாமூதிவாடி மெய்க்கரத்தில் கனத்ததொரு மைந்தர்தன்னை எடுக்கையிலே தள்ளாடிசோபமாகி இப்படியேசுமந்திருந்தா ளென்தாயாண்டே (௫௱௰௫)

சாந்தமாயெனைச்சுமந்த அன்னையாற்கு சரீரமதில் வடிவுநிறந்தங்கம்போலாம்- ஆய்ந்தமதிபூரணம் போல்முகமேயாகும், அழகுமதியொளிவதுபோல் புருவமாகும், தோய்ந்தவிழிதிறமதித குமிழியா

குஞ்சொல்லரியநாசியதும் வசிகளாகும்-காய்ந்தமலர்க்கொப்பான இதழையாகும்-கனத்தநந்தங்கருநாகக்கனிபோலாண்டே. (௩௱௰௬)

வளையெழுந்தக்கதிரவன்போல்செருக்கழற்று - வயிரமிட்டிழைத்தசித்திரமார்புமாகும் - திரையெடுத்தஅலையதுபோற்சிறந்தவுந்தி-செவ்விளநீர்க்கொப்பானகொங்கையொண்டும் -துறையடுத்தத்தேளியைப்போல்கணுக்காலாகும் - தொந்திவயிருவிலைபோல்துவண்டொணல்- நிலையடுத்தபுத்தகம்போலொத்தபாதம் - நேராகநானிருந்தபாண்டமாண்டே. (௩௱௰௭)

இருந்ததலம்விட்டெழுந்திருக்கஅஞ்சி - யென்மனதாலறுசுவையைவாங்கஅஞ்சி - சிறந்தருளுந்செய்வதலம்போகஅஞ்சி;- சென்மவினைதீரநதிமுழுகஅஞ்சி-பரந்தவயிறினிலிருந்துபாடுபட்டார்பாலகனாய்வளர்ந்துவிந்தப்பாரில்வந்தேன் - வருந்தியென்னைவளர்த்தெடுத்தஅன்னைகெர்ப்பம்-வயிறுதனிலிப்படியேவளர்ந்தேனாண்டே. ()

ஊணில்லையுறக்கமில்லையுணர்வுமில்லையுறவாகச்செயவிஜையயோகமில்லை -நாணில்லைநகைப்பதில்லைநலந்தானில்லை- நல்லறிவுசற்குணமுநாட்டமில்லை-வீணில்லைவிருப்பமில்லைவிகற்பமில்லை - மெய்தளர்ந்துமேனிபுண்ணாய்மெலிந்துஅன்னை -ஆணில்லையென்றுமனநொந்துவாடி-அங்கமதிலிப்படியேயமைந்தேனாண்டே. (௩௱௰௯)

கையாறச்செய்கின்றதொழிலுமில்லை - காலாறநடக்கின்றசுருக்குமில்லை-மையானவிழிமடவாளுறவுமில்லை-மனதாரஅள்ளியிடுந்தருமமில்லை - செய்கின்றவாழ்க்கையில்லைசெழிப்புமில்லை - சேர்ந்தணைந்ததந்தையின்மேலாசையில்லை - ஐயாறுநான்முதலாய் மூன்றுநாளும்-அங்கமெனுந்திருக்கோயிலமர்ந்தேனாண்டே. (௩௱௨௰)

ஓடிதானெடுத்துவைத்தாலுடலுங்குன்றி - ஒத்தவிடைசிறுத்துக்கொங்கையுடல்கறுத்து, சீரடியாய்நடந்துந்திக்காலுமீறிச்-செப்பரியஅன்னைமனஞ்சலித்துவிம்மி, காரிடிபுமின்னல்கருமனமேதஞ்சி-கன்னமுகில்வருஷித்துக்கடினமாகி, ஆராடிபடுக்குமன்னை கெர்ப்பத்துள்ளே - அமைத்திந்தப்படியாகவளர்ந்தேனாண்டே. (௩௱௨௰௧)

உருவாகித்தலைகீழ்கால்மேலேயாகி - பூணுகியொப்பரியவுடலுமாகி, தருவாகிசண்டனனுகாமலாகி - சடம்வளர்ந்துஒன்பதுதிங் களிலேயென்னை, திருவாகிதனஞ்செயன்தானெழுந்துவோங்கி - தீர்க்கமுடன்தலைமேல்கால்கீழேநோக்கி, அருவாகியன்னையுட கருவூர்தன்னில் - ஆதியெனுஞ்சோதியைத்தானர்ச்சித்தேனே. (௩௱௨௰௨)

அகத்திலோரகமெனவேவீடுங்கட்டி- அஷ்டகருவிக்குலத்தைக்குடியாய்நாட்டி,ஜெகத்திலுபர்வேதமறியாதசூட்சம் - சிறந்தருளும்வ

யதுபிரமாணங்கூட்டி, யுகத்திலெழுசாஸ்திரத்தால்முடியாவண்ண-முர்யத்தியானவகையுண்மைகாட்டி, குகைத்தலத்திலிருந்தவனைக் கருவூர்க்குள்ளே - கும்பிட்டகோயிலெல்லாங்கூறுவேனே. (௩௨௩)

ஆறுதாரதரிசனை - தரு.

கும்பிட்டுக்கொண்டேன்காண் - கணேசனைக்
கும்பிட்டுக்கொண்டேன்காண்

கும்பிட்டுக்கொண்டேன் குருவருள்பாதத்தில் - கோயில்திருக்காணி மூலத்தின்வாசலில் - வெம்பிட்டக்கனியையின்பிட்டுவுண்டருள் வெத்திமதகரிசத்திதன்பாதத்தில், அம்பிகையாகிய ஆதிபரஞ்சோதி-அண்டத்தைவிட்டு அணுகியமூலத்தில் - அம்பக்கனியுண்டு தும்பிக்கைப்பாதத்தை - நம்பிக்கையாகநாற்கோணவீட்டுக்குள். கும்பி()

துன்பமகற்றுஞ் சுழிமுனைவீட்டில் - துலையாத்துயரந்துலைத்திடும்வீட்டினில் - நம்பனருள்புக ழன்புதருமூலம் நாலிதழ்மீதிலே நாயகன்பாதத்தை - சின்மயசிற்பரஞ் சித்ரமணிவாசல் - அன்னையருள்திரு அம்பிகைத்தன்பதம் - உன்னிதமானச் சுழிமுனைவீட்டினில் - தன்னைத்தானறியுந் தந்திமுகனருள். கும்பி (௩௨௫)

செங்கதிர்சந்திரன் தங்கியவீட்டினில-திருநடனம்புரித் தட்புறக்கோட்டினில் -ஐங்கரன்வல்லபைசங்கரிபாதத்தில்-ஆனந்தமூலத்தில் தானின்றனுதினம்-கங்கைபணியுந் திருமலர்ச்சோலை - கமலமலராயிரத்தெட்டிதழினில் - திங்கள்மதிவளர்சிங்காதனத்தினில் -எங்கள்குருபரனீசன்பொற்பாதமே. கும்பி (௩௨௬)

மூர்த்திதருஞ்சுழிமூலத்தின்வாசலில் - முன்னேமறித்தெழுசந்நிதிவீதியில் - தந்திமுகவனும்வல்லபையாகிய சத்திநாற்கோணச்சதுரிதழ்மேலேயான் - சித்திதருஞ்செயல்வித்தியாதனத்தினில், - உத்தமர்சூழுமுலகரசாள்வது - மத்தகஜநவரத்தினகுண்டலி-வல்லபைதன்பதமுல்லாசமென்சொல்வேன். கும்பி (௩௨௭)

சொல்லும்பதிக்குமேனுலிதழ்கோணஞ் - சுழித்தெழுத்தட்சரந்தம்பியருள்முகன்-வெல்லும்விதியைவிதித்தருள்கர்த்தன்- பிர்ம்மாசரஸ்பதிபாதத்தைக்கண்டுநான்- அல்லலகற்றுமவண்டமதுகடந்-தட்புறஞ்சித்திரமணிமலர்வாசலில் - வல்லபையாகியபிர்ம்மா சரஸ்வதி-வச்சிரமேடைநடுரட்சகன்பொற்பதம். கும்பி (௩௨௮)

ஆதிமறைநாலும்வேதம்வகுத்தவ - ராயன்தன்னுபிக்கமலத்துதித்தவர்-சாதிகுலத்தைவகுத்தசரஸ்பதி தந்தைபிர்மாவைநான் சிந்தைகொண்டர்ச்சித்து-சோதியெனுஞ்சுழிமூலஸ்தானங்கடந் - தோதுமறைநாதவித்தினருள்பதம் -வீதியெனுஞ்சதுஷ்கோணத்திலங்கியபிர்மா சரஸ்பதிபாதம்பணிந்தேன்காண். கும்பி (௩௨௯)

சொன்னபதிக்குமேலட்சரம்பத்துத் - துலங்கியவிடுபிறைகோணத்தாலயம் - வின்னமில்லாததில்மாலுடன்லட்சுமி. வீற்றிருந்தார்

மணிபூரகவீட்டினில் - வன்னமலர்பணிபூரகந்தன்னில்வலித்தபிறை போலெழுந்தவக்கோணத்தில் - நன்னயநாபிக்கமலத்திலட்சுமி நாரணன்பாதத்தில்காரணமாகவும். கும்பி (௬௭௰)

உருத்தமதிக்குமப்பாலெழுகோணம் - உயர்கின்றஅட்சரம்பன்னிரண்டாம்வீட்டில் - திருத்தமிருக்கின்றருத்திரனுருத் திரியைதேடிக்கதலியடிக்குள்ளேகண்டியான் - இருநாலிருத்தியொருநாலையோட்டி - எழுந்துவளர்ந்தக்கதலியடியினில் - மருவியருத்திரனுருத்திரிதன்பதம்-வணக்கத்துடன்கண்டிணக்கத்துடனேயான். கும்பி ()

காரும்விசுத்திபூ கோணவாலயம் - கண்டுகொள்ளும்பதினறிதழட்சரம்-திருமயேஸ்பரதேவிருப்பிடஞ்-சீராய்ம யேஸ்பரிபாதத்தைக்கண்டியான்-தேருங்கரியுஞ்சிவிகைபரியுந் - தெரிசனங்காட்டியருளுஞ்சுழித்தியில் - மாருருவாகிமயமாய்விளங்கும் - மயேஸ்பரன்பாதமயேஸ்பரிபாதத்தில். கும்பி (௬௭௨)

வித்தியாதனகனமேவுஞ்சிவாலய - மேருவினுக்கினலலாடஸ்தானந்தனில் -அத்திபுரத்திலருளுஞ்சதாசிவ-னுயிமனோன்மணிதாயார்தன்பாதத்தில்-சித்தியருள்சத்தவட்டத்திலங்கிய - சிற்பரதட்சரத்தற்பொருள்ரெண்டினில் - முத்தியாய்நின்றபதிக்குமேலப்புற-மோனம்வளர்ந்தெழுந்தட்சரமொன்றிலே. கும்பி (௬௭௩)

அன்பிருநூறு மிருபத்துநான்கும் - அகண்டகடாகமதுபடைத்தாக்கினை - அன்பமகற்றும்வாலாம்பிகைப்பாதத்தில் - தொண்டுசெய்தர்ச்சனைகண்டுமகிழ்ந்தயான் - இன்பமதிமலரன்புவைத்தம்பிகை - யேகாக்ஷரங்கொண்டுவாகாசமேருவில் - தன்மயசுருபசுகாதீதங்காட்டியே-தந்தனரிந்திரசந்திரப்பிரகாசமே. கும்பி (௬௭௪)

சுழித்தாளைமூன்று மெழுத்தாளைமூலம் - விழித்தாளைக்கண்டுஅழித்தாளையம்பிகை-யெழுத்தாளையாக்கினைக்கேகியெழும்பும் - பரத்தாளிணையடிபாதம்பணிந்துயான் - அழையாளையன்னநடையாளையின்பத்-துடையாளைமூலத்திடையாளையம்பிகை - பழையாளைலோகம் பதினுலுங்காத்தாளை - தழையாளையென்னிட தாய்பதங்கண்டியான். கும்பி (௬௭௫)

அல்வினையமெல்வினைஒல்வினைமூல்வினை - நல்வினையெல்வினைவல்வினைக்கண்டியான் - அல்விநகர்விட்டகண்டவெளிகடந் - தத்திபுரத்துக்கருகேசுழிமுனை - அல்வியமாமதிருஞ்நகர்மாளிக - சுத்தபெருவெளிகர்த்தனிருப்பிடஞ் - சொல்லிலடங்கா துருவவெளிதனில்-துரியாதிதமடவாலயங்கண்டியோன். கும்பி (௬௭௬)

மதியைப்பிடித்துநிதியைத்தரித்து - விதியைப்பிடித்துப்பதியிலடைத்துக்கெதியையடக்கிச்சதியையொடுக்கி - அதிவிதவம்பிகையாத்தாளைக்கண்டியான் - விதிமதிரெண்டுமிறுக்கியிறுக்கி விளக்கித்துல

க்கிப்பெருக்கிவித்தாக்கி-நதிவஷைாக்கிய டக்கியேயின்கலை - நாடுநடு வணைகூடுறவாகவே. கும்பி (௩௩௭)

பாணிச்சியம்பரகாணிச்சியென்னுடல் - ஊணிச்சிப்பிரசங்கவாணிச்சியுத்தண்ட-வேணிச்சியாக்கினைமேவும்வாலாம்பிகை - ஆணிப்பொற்கமலஅம்பிகைபொற்பதம்-பாணிச்சடைச்சியைபங்கவலைச்சியைப்-பத்தியிடைச்சியைவெற்றிநடைச்சியை - ஆறுப்பறைச்சியைவாணுதுலாச்சியை-அம்பிகைபாதத்தைநம்பினேனன்பனுன்.()

ஆசைப்பெருங்கடல்வெள்ளத்தினுள்ளே - அழுந்தியுடலையெடுத்துயிர்ப்பால-மோசைச்சிலம்பொலிகேட்டுவாலாம்பிகை- யுத்தமியாகியசத்திதன்பாதத்தை-பாஷைபதினெட்டும்வர்சம்பொருந்திய தேசதேசாதிகள்ராசர்பணிநதிடும் - ரேசபுவனமீதாளுஞ்சக்ரவர்த்தி-பூசிதபிர்மசதாசிவசம்புவை. கும்பி (௩௩௯)

விருத்தம்.

மரகதத்திபரிபுரத்திவாமிவாலை - மகுடரத்நவம்பரத்தி மதுரவின்பம்-திருபுரத்திசெழுங்கரத்திதில்லைவாழுஞ் - செயபுரத்திமாபரத்திசிறுபெண்ணுத்தாள் - அரிபுரத்திமகுடரத்நஆதிசோதி - யகண்டத்தியுகண்டத்தியலகையான - திருபுரத்திகருவிருத்துசெழிக்கவந்த-சிவகாமிகமலமலர்தெரிசித்தேனே. (௩௪0)

வாரிடைச்சிகார்குழற்சிவதனப்பேச்சி - வாழ்பிறிச்சியாழ்பறைச்சிவட்டமீதில் - சீர்புரச்சிமாவிடைச்சிதிங்கள்சூட்சிசெங்கனலாற்சிவந்தெழுந்த சிறுபெண்ணுத்தாள் - ஆர்விழிச்சிபோர்நடைச்சியதியசூட்சி - அழகிடைச்சிதுடிநடைச்சிபகமில்லாத - பூரணத்தியம்பணத்தி புருவமையம் - பொருளான வம்பிகையைப் போற்றினேனே. (௩௪௧)

காத்தாளையகண்டமதின்கருத்தினுளை - கனகசபைவட்டமதில்கதிராஞான, மூத்தாளைமூவருக்குந்தாயானுளை - முப்புரத்தையெரித்தமூலச்சுழியினுளைப், பாத்தாளைப்பற்பநதிகளையாத்தாளை - ப்திறுவுலகுக்குந்தாயானுளைப், பூத்தாளைப்பூவிலொருபிஞ்சானுளைப்-புகழுமாதளம்பூவின்வடிவானுளை. (௩௪௨)

சித்தர்கள்தான்பதினெண்பேராத்தாள்சொன்ன - செயலெல்லாங்கண்டுணர்ந்து தெளிந்திட்டார்காண், வித்தநிதநாதபரி பூரணத்தின் - விவரமெல்லாங்கண்டுணர்ந்துமென்மேல்வாழ்த்தார், கூத்தாடிதிருநடனக்குவட்டிலேதான் - கும்பமுனியால்தெளிந்தோர் கோடாகோடி, நீர்த்தாளையென்கலியைச்சிறுபெண்மாது-செம்பொனிறவம்பிகையைத்தெரிசித்தேனே. (௨௪௩)

ஆரணத்திநாரணத்தியாகமத்தி - அகண்டத்தியம்பரத்தியாதியான, காரணத்திவாரணத்திகனகசத்தி-கமலமலர்கருணைவெற்பில்காட்

சிதந்த, சிரணத்திமாரணத்திதிங்கள்சோதி-செம்பரத்தியம்பரத்திசி வகாமத்தி, பூரணத்திபொற்கமலப்புருவத்தாயைப் - புவனமயேசும் பரிகமலம்போற்றினேனே. (ருசச)

கனல்கோடிரவிகோடிகாந்திகோடி - கருதுசுழிமுனைகோடிமின் னல்கோடி, அனல்கோடிமுகில்கோடியண்டங்கோடி-அகண்டமண் டலங்கோடியளவில்லாத, சுனைகோடிசுழலகோடிகுட்சங்கோடி குட்சசடாதரங்கோடிசுடர்தான்கோடி, புனல்கோடிவினைகோடிதாப ங்கோடி-புகழ்வணங்கித்திருவடியைப்புகழ்வேனுண்டே. (ருசரு)

கொச்சகம்.

என்னையுருவாக்கியுடலெண்ணெழுத்தைமெய்யாக்கி
அன்னையெனுமண்டபத்திலம்பரமாஞ்சிற்பரத்தில்
கன்னல்விழிமாமறைச்சிகாதலருளும்பறைச்சி
உன்னிதவாலாம்பிகையேனுட்பொருளைப்போற்றினனே. (ருசசு)

முட்டவிருகுட்டிமுகமறியாவம்பிகையை
தட்டழியாவட்டமதில்தானவனுய்த்தானிருந்து
மட்டுமறிபன்னிரண்டில்வாங்குமொருநாலதனுல்
கட்டியிறுக்கிநெல்லகருத்தால்துதித்தேனே. (ருசஎ)

மறைநாலும்வாழுகின்றமாமறையுந்தாண்டியப்பால்
கரைகடந்துயான்மகிழுங்கருவீட்டிலேபுகுந்து
திரைகடந்துநின்றுவளர்திருவீட்டுக்கப்புறத்தில்
அரைகடந்தசோதிசுடரம்பிகையைப்போற்றினனே. (ருசஅ)

ஷெ ஆனந்தக்களிப்பு-தரு.

தனனதனனதந்தனனு-தான-தனனதனனதனனதந்தனனு.

நாற்கோணச்சக்கரவீட்டில்-நல்ல - நாலிதழானநடுவணைக்கோட்டில் தீர்க்கமாயென்னையுருகாட்டி-வைத்தகன - சித்திவிநாயகாதித்தஞ்சரணம்-சட்கோணத்துள்ளலங்காரம் - பிர்ம - சரஸ்பதிபாதபங்கயத்தைநான்மறவேன்-தற்காத்தருள்புரிந்தேதான்-சிவ - சம்போசதாசிவசங்கராசரணம். தனன (ருசக)

ஆசாபாசமுந்தவிர்ந்து-நல்ல- ஆனந்தஞானக்கடலில்முழுகி - பூசாபலன்செய்துவைத்த-ரத்ந - பொன்னுங்கணபதியின்னஞ்சரணம்-நேசபரிபூரணத்தின்-மதுர - வாசமலரருள்கணேசனேசரணம்பேசும்பெருமூலாதாரஞ் சுழியின் - பிராணகுண்டலிபொற்கமலத்தைமறவேன். தனன (ருரு)

அடிநடுமுடியுமறிந்து-நல்ல - அகண்டசாகரஞானக்கடலிலிருந்து-கொடியபாசத்தைப்பிறிநது-நிதம் - குடியாகும்பிர்மாவைநோக்கினேன்சரணம்-பிடிபடாதரவிமதியும் - இதை - பிலமாய்ப்பிடித்துயான்வாசிகொண்டேறி-தூடியொருசாதனையாண்டில்- துன்ப - மகனும்பிர்மாவையான்தொழுதடிசரணம். தனன (ருரு)

உந்திக்கமலத்தின்மேலே-நல்ல - மூக்கோணவட்டத்தினுள்ளேபிரகாசஞ் - செந்திசிங்காசனத்துள்ளே-சிவ-சித்திதரும்பரஞ்சித்திரசரணம்-சந்திரப்புட்கரணிதஞ்சகையில் - சித்திரச் - சாவடிமண்டபசாலைநடுவில-கெந்தசுகந்தவிலாசம்-விநோத - அந்தபரிமள - அகண்டவிலாசம். தனன (௫௫௨)

காயமென்றேருவாயடுத்து-நல்ல - காணுதரூபக்கருத்தைக்கொடுத்து-மாயாவிசுத்திபடைத்து-வாழும் - மய்யல்பரன்பாதத்தைமறவேன்காணுண்டே-அயபதிகளுந்தாண்டி - நல்ல - சுக்குலத்தாடுஞ்சதாதிவன்தாண்டி-தாடதாணுமறவ்வண்டி-குரு - தற்பரஞானப்பிரபந்தமிதாண்டி. தனன (௫௫௩)

அம்பிமதசரிவீட்டில்-நல்ல-சுக்கிலநாதயிரண்டையுமூட்டி - வெம்பா அருவையுங்காட்டி-வைத்த- அம்பிகையுன்பதம் - நம்பினேன்சரணம்-தம்பித்துவாசிரண்டுதி-மதி - சார்வானசுக்கிலத்தாலேகொண்டத்தி-மம்பித்துஎண்சாளணந்து-வைத்த - வாலாம்பிகைப்பதமறவேன்காண்சரணம். தனன (௫௫௪)

ஊதியதாரைவெளியில்-நல்ல - உம்மென்றமோங்காரவூத்தைக்குழியில்-வீதியிலேலன்னேயமைந்து-வைத்த - மெல்லியேயப்பிகைவல்லியேசரணம் - சேதியறிந்தேன்காணம்பாள் - மதி-சேரும்பதியதிந்தாறானைக்காட்டி மேதினியோர்களெல்லாரும் -ஞான-வெட்டியானென்றுமிகமகிழ்ந்தாரே, தனன (௫௫௫)

ஸ்ரீங்கார அம்பரவீதி - நல்ல-சிற்பரவானந்ததற்பரசோதி-ஆங்காரக்கூத்தோடே - வெற்றிநின்ற-அம்பிகையுன்பதநம்பினேன்சரணம் தீங்காமற்பிரகாசவீட்டில் - நின்று-நெடுநாளிருந்தந்தநிலையெல்லாங்கண்டு - தீங்கில்லாஜெகச்சோதிபாதம் - செனம-சாகரமுள்ளநான்வளாயுநான்மறவேன், தனன, (௫௫௬)

விருத்தம்.

திருமருவுங்கருவூரி லுதித்துப்பத்து - திங்கள்சென்றுபாரில்வந்தசெய்கையெல்லாம், சருவுருவாயான்வளர்ந்துகண்டகாட்சி - காயமெடுத்துழன்றதன்பின்கருத்துமாறி. உருமெடுத்து மனையாட்டிக்கைசயிற்சிக்கி- உபாயமதாயான்விலங்கியுலகத்துள்ளே, இருவருமேயொருமனதாய்குருவுஞ்சிஷன்-இருப்பதுபோலில்லமதிலினிவாழ்ந்தேனே, (௫௫௭)

இனியிருந்துவாழ்ந்தசங்கையெவருங்காணூர் ' இசுத்திவ்ரதிபுருடனிருந்ததுபோதுள்ள, வனிதையுடன்மாய்கைதனில் மயங்கிடாமல் மனுநீதிதவருமல்மனையாள்கையில், தனிநினைவாய்தாயுடனேமைந்தன்கூடித் - தானிருக்கும்பாவனைபோல்தனதாயொத்து, நானிந்தப்படியெரியுங்கும்பிக்காக - நயந்துநெய்தல்செய்துமிந்தநரட்டில்தானே, (௫௫௮)

நாட்டிலனைவோரிருக்கு நடத்தைபோலும் - நாயகனும்ரதியு முறவாடும்போலும், ஊட்டியுணர்விக்குமன்ன சுவைகள்போலு-முடுத்து துகிலாபரணமுகமைபோலும், காட்டிடநாள்திகள்கர்ம ங்கருதும்போலும் - கவிதைபுலவோர்கள்வரப்போகும்போலும், தேட்டினிலுமாகுதிகள்பூசைபோலுந்-தேவதைக்குமுபசாரமுஞ்செய்தல்தானே. (௩௫௯)

இந்தவிதமாயிருந்து வுலகந்தன்னில் - இனியிருந்துவாழ்ந்தது போமெலடுத்தேன்ஞானம், பைந்தமிழிற்குயர்ந்த அகத்திசர்வந்து-பலகலையுமெனக்குரைத்துப்பாலித்தார்காண். எந்தைகுருபரனைய அதினமும்போற்றி-யெடுத்தவடியறிந்துநடுமுடியுங்கண்டு, சுந்தரமாங்காயசித்தியோகசித்தி-சுரூபசித்திஞானசித்தி துதிபெற்றேனே(

பெத்தபேரிப்படிதானமைக்கும்வாறு - பிரபல்லியம்விளங்கியிந்நூல்பிரசங்கத்தைச், சித்தருக்குஞ்சிவயோகி ஞானத்தோர்க்கும்-தெரிந்திடயான்தத்துவத்தின்செயல்களாய்ந்து, முத்தமிழால்பூநவத்தின்கருவூர்நாட்டில் -மூலமெல்லாம்வெளிதிறநதுமுன்னேசொன்னேன், கற்றறிவோர்ஞானவெட்டிவேதாந்தத்தின் -கற்பனையைக்கண்டறிவோர்கருத்துள்ளோரே. (௩௬௧)

கருத்தறிந்துகருவறிந்துகமலவீட்டில் - கருணைமதியமிர்தரசபானகுச்சம், பொருத்தமதாயருள்விந்துகாரசாரம் பூரணத்திலிலகுஞ்சுழிபுகழையாய்ந்து, தரித்திரமும்வறுமையகன் றருள்பெற்றுசான் - சரூசயங்கள்விளங்கசங்கைதமிழாற்சொன்னேன், குருவினருள்புகழ்பெறவுமினிதான்கூறுங் -கோடானகோடிரகசியமுஞ்சொல்வேன். (௩௬௨)

சொன்மொழியையறிந்துவெகுகுச்சங்கண்டு - சுழியின்முனையறிந்துகற்பசுகாதீதத்தில், வல்லமையாய்ஜெகச்சோதி விளங்கும்வீட்டில் - மதியும்ரவியொளியுமணிமுடியுநேர்மை, அல்லலற்றுதிருநடனக்கமலவீட்டில் - ஆயிரத்தெட்டிதழில்நின்று அமிர்தமுண்டு, நன்மைதன்மையறியசிவயோகஞான - நற்கமலநாதவிந்தின்நடனமாண்டே, (௩௬௩)

சௌனகாலதரிசனை - வண்ணம்-தரு,

தானதனந்தனனு - தன - தானதனந்தனனு-தன
தானதானனு-தானதானனு-தானதானனு தானதானனு

சோதிப்பெருந்துறையி-லுயர்நாதவிந்துதித்து - சுக்கிலமாகிய மூலமேலுந்திமேலமு - மித்திரசாலமதாகவே வீதிநடுவணையிலுடலாய்வளர்நதெழுந்து - விவேகமும் - வைபோகமும்-வெகுபாவமுங்கருவூர்தனில்வாழ்கவே ஆதியென்றம்பலத்தில் - வாலாம்பிகைப்பதத்தில் - கொண்டஆசையும் - பசுபாசமும் விட்டு-நேசமதாகவே

நின்றுவணங்கியான்-பாதிமதியணிந்த - சிவபாதபங்கயத்தில்- பதிவீ
ட்டிலேகெதிகாட்டியே - எனையழைத்துவளர்த்து - அமிர்தமூட்டி
னள் அம்பிகைபாதமருள்புரிவேனே. தான (௫௰௪)
வாழ்வுபுரிந்தருளூர் திரு-வாலாம்பிகைபதத்தில் - சதுர் வாசலில்ச
வுகாசமாய் - பிரயாகை-முத்திபூஞ்சாலைவிட்டேகினேன் - பாழும்புப்
பாழ்கடந்து-கருவூர்கடந்துநின்று - அதிலாவியும்- பரமேவியும்-து
ரைசாமியிருந்ததிசாரமேநம்பினேன் - சூழுந்திரிபுரத்தில் - சுகஞா
னப்ரகாசமதில்-மலர்- தூபமும்-வன்னிதீபமும்-வலமாகவல்பாய்
வணங்கிப்பணிந்துயான் - தாழ்வுவாரமனுமே - பசியாரவுமமிர்தமு
ண்டு வெகுசாக்ரமுஞ் ஞானமார்க்கமும் - கரு - நீக்கியபிராமிதின்
பதம்போற்றியே - வாசியறிந்துமலர்பொழிந்தேனே, தான ()
தாயகமாகினதால்-சிவ-தற்பரைபொற்பதத்தில் - பல- சாஸ்திரங்
களும்-கோத்திரத்தொடு - சூஸ்திரமேசெய்யுஞ் சூதுகள்விட்டந்த-
ஆயனரண்மனையில்-மணி-யானபூரகத்தில்-வாலாம்பிகைப்பத - மா
மலர்மதிவிலாசமேவிய-வண்ணககவியருள் - ஓயாமல்வாசிகொண்டு
கண்ட-மூதிடுத்தாரையிலே-யமுதூட்டமு - மதி-லாட்டமும் - ரவி
கூட்டமுங் - கமலவீட்டினுரித்துக்கருவூரில்வந்துயான் - காயசித்தி
பெறவும்-உடல்-மாயாமருந்தறிந்தேன் கலைவாசியு மதிபேசியுமிரு
நாசிசுவாசமிறந்துமிராமனு - மிருந்துலகத்தோடுணர்ந்துவாழ்ந்
தேன், தான (௫௰௬)
ஊதந்தூருத்தியிலே- தாரை - யோடாமலோங்காரங்கொண்டதி
லோக்கியமுங்-குருவாக்கியமும் - அருள்பாக்கியந்தந்து- பாலித்து
வாலாம்பிகை-சூதகவுடையா - சிறுவீட்டிலேயழைத்து- திருவாலை
யைமுடி மேலேறியொரு- நாலையுங்காட்டியே - ஞானம்புகழ்ந்தரு
ள்-பாதகமென்செய்திடும் - பசுபாசம்விட்டகன்று - பலந்தாரும்-
நிலையூறும்-கலைநாடுங்-கருவூரிலேறுங்குடிவளர் - வேதவெளியதியா-
சாரம்வெண்மதிவெண்சுடரில்-வெகுநேமியை-சிவகாமியை - அபி
ராமிபதமறவாமலநுதினமசடறவும்யான்வணங்கினேனே. தான )
முப்புரமுச்சுடரில்-சிவ-மூன்றெழுத்ததிலே - மூலச்சுழியில்ஞா
லப்பதியில்மலர்-முத்திதருஞ்சிவசித்திப்பிரகாசமே - தற்பரமாகிய
தோர்சுவாதிஷ்டான ஆலயத்தில்-சரஸ்வதியும் - சதுர்முகனும்-பல
சாதிவகுத்தவர்-பாதம்பணிந்துயான்-அப்புவுமானதோர் - மணிபூர
கத்திலேதா - னலைகடலில்-மலைவளவில்-ஒரு ஆலிலைமேல்திருமால்த
ருலட்சுமி-சிற்பரைமுக்கோணந்திரள்கதலிவட்டமதில் - வருஞ்சேர்
ந்து வலவினைதீர்ந்துமாறிட காய்ந்துருத்திர னுருத்திரிதன்பதந்
கலங்காமல்வணங்கிக்கருதினேனே. தான (௫௰௮
தெண்டிரைவாழ்புவியுஞ்-செகமுழுதுநாசவிந்தால் - கனந்தே
டலுங் கவிபாடலு - மதிகூடலும்-நடமாடலும்போலவே - கன்

மகிழ்ச்சிபெற - மதி-காட்டும்விசுத்தியிலேகதிசாயமும்-வெகுஞாய
மும்வைத்து-மாயமாகிமறைத்தசுழித்தியிலே - மண்டலமூன்றது
போல் - அறுகோணவாசலிலே-கலைமாறவும்.பதினாறிலே-இருநாலை
யிறக்கியுநாலையும்விட்டவர்- வேண்டிமலர்பொழியும்-விசுத்திமயே
ஸ்பரத்தில்-வெகு-வேதமுஞ்சகலதேரு - மலர்நாதம்புரியு-மயேஸ்
பரிதன்பத - மயங்காமலநுதினம்வணங்கினேனே, தான (௩௯௯)

ஆக்கினைவட்டமதில் - வள ரவ்வுடனுவ்வாகி-சிறுவனாயிலேவட்ட
த்திணாயிலே . தெண்டிணாயிலே - பொருளென்றெனநின்றவர் - அ
க்கியபாதமுடன்-சுடர்சோக்கியே-நின்றனுகா-வாசிஅக்கியே- மதி
நோக்கியே - விணைபோக்கியே-காயத்தில்-பூரணத்தினருள் - உக்கிர
மாய்நற்கமலமோராயிரத்தெட்டிதழில் -ஒளிவாகியே-சுழிதாவியே
யுறவாகவே-மதிகுடியசெஞ்சடை மீதிலனுகிநான் பாக்கியவாமெ
னுமேபாரில்-பாசவினையகற்றி-பாரிசாலகத்துடன் - மேவியருந்அ
டல்வாழும்புறத்தில் மகிழ்ந்தஇருந்துநான் - வணங்கச்சதாசிவ ம
னோன்மணியையவாழ்த்தினேனே, தான (௩௭௰)

நவ்வுடன்மவ்வாகியோடும் - நாணிந்தவீதியிலே - வருஞாயமுமு
யர்தேமும் - வெகுநீதமுமாகவே-நின்றுபொற்பதத்தில்- சிவ்வுடன
வ்விதிலே வாசிதேரோடும்வீதியிலே-மதிதேங்கி-டாமனு- மோங்கிப்
பானுவில்-தீங்கில்லாத்தெளிந்து - ஆக்கினையில் - அவ்வில்வளர்ந்தரு
ளுங்-கமல - மாயிரத்தெட்டிதழில் - அருகாகநின்றதி லாளவெண்ம
திதாள்சிறந்த சதாசிவன்பாதத்தில் வெவ்வகையுந்தானடக்கி -சத்தம்
ஏகாந்தம்வீதியிலே இருகாலிலே-புறவாகுமருகாகவும்-நின்றுமேஆ
ண்டேவணங்கினேன் ஆதிசதாசிவனையனுதினமறவேனே, தான ()

விருத்தம்.

நாற்சதிர்மூலமதில்கணேசபீடம் - நல்லறிவுபத்திதரும் பிரமபீ
டம், ஊச்சிதமாம்பூரகத்தில்திருமால்பீடம் - உற்றதொண்ணூற்று
அகருவிபீடம், தீச்சுடரில்செங்கதலிதோப்புக்குள்ளே-சிறந்ததொ
ருருத்திரன்தன்தேவபீடம், மேற்சதிரமானதொருமஹேசபீடம்-
விளங்குசதாசிவனிருதாள்பீடம்போற்றி, (௩௭௨)

விணாந்துநின்றஐம்பூதந்தன்னைக்காட்டி -விழாமதிமேயொன்று
கிமேலேநோக்கி, உணர்ந்துநின்றமனத்தையடிமூலம்வைத்து- ஓங்
காரவீட்டுக்குள்புகுந்துமேவி, விணாந்துபிறவிக்கடலைக்கடந்துபா
னு-மேலான ஆக்கினையின்பதியிலேதி, இறவாமவிந்தவுட லெனக்கு
ச்சொந்த - மிருந்ததனலம்பிகையைவருந்தினேனே, (௩௭௩)

விஸ்தாரவிழிமடவாள்கெர்ப்பத்துள்ளே - விளங்கியினியிட்படி
யேயிருந்துவாழ்ந்தேன், ஆஸ்தானநாதவிந்திரண்டுங்கூடி-யருவாகி

யுருவாகிவளர்ந்தவாறும், ஆஸ்தானமெனுங்கருவூரதனில்நின்று-அ
ழகுதிங்களொன்பதுஞ்சென்றனவாறும்; வாஸ்தானசித்திரகருவூரி
ல்மேவி - வணங்கிதெரிசித்ததலம்வசனித்தேனே, (௩௭௪)

வீறுபெற்றகருவூருநாட்டுக்குள்ளே - விளங்கவும்யான்சொந்த
மென்றிருந்துவாழ்ந்து,பேறுபெற்றசதாசிவனைப்போற்றிசெய்து
பெருமையுள்ளதிங்களொருபத்துமாச்சு, நூறுபெற்றகருவூரின்வள
ப்பமெல்லாஞ் - சொல்லிவிட்டேன்கணக்கதுவா யினிதாங்கேளீர்,
கூறுபெற்றயிப்புவிக்குள்யான்பிறந்த - குறிப்பையினியறிவதற்குக்
கூறுவேனே, (௩௭௫)

சிறந்தருளுநாதவிந்திரண்டுங்கூடி - செடலமெனத்திரண்டுவந்த
செய்தியெல்லாங், கறந்தபால்காச்சியதைத்தோச்சுப்பின்னுங் - க
டைந்தெடுத்தவெண்ணெயைப்போல்பிறித்துயானும், தெரிந்தம
ட்டும்வகுத்துரைக்குங்கருவூர்க்குள்ளே, செழித்தநாள்முந்நூறுஞ்
சென்றதாகில், மறந்திறந்துசெய்தசிவபூசைவிட்டு - வாழ்புவியிலு
தித்தவகைவசனிப்பேனே, (௩௭௬)

ஆணுவமுமாய்கையொடுகாமியம்விட்டு - அணுகியிந்தப்படியா
கநம்பியானும், தாணுவமாய்வீற்றிருந்தேன்கருவூர்நாட்டில் - தய
ங்காமல்திங்களொருபத்துமாச்சு, வானுதலாள்கருவுக்குள்வளர்த்தி
சொன்னேன்-வயதாச்சுநானிருந்தகாணிபோச்சு, ஊனுதலாயடுத்
திருந்த அறையைவிட்டு-உண்மையுடன்வெளியில்வந்து துரைசெய்
வேனே, (௩௭௭)

சுழிமூலத்தடிவாசல்கருவைக்கண்டு - தூங்காமல்தூங்கிவெகு
ஞானங்கொண்டு, ஒளிவாசலுட்புகுந்துநின்றுமேவி - உற்றவபிரா
மியிவளுருவுங்கண்டு-கழிநாலுஞ்சுழியேந்தியொருவரோடுங்.கருதா
மல்பேசாமல்கலக்கமெய்தார், பழிபாவமென்றறியார் தனுஞ்செய
ன்றன்-பரதவத்தைப்பார்த்துலகில்போவென்றனே, (௩௭௮)

கொச்சகம்.

முன்னுளிருவினைகள் மூண்டுவருமென்றறிவில்
தன்னுலறியாமல்தானவனுய்வீற்றிருந்து
எந்நாளுஞ்சொந்தமென்றுஎண்ணிமனம்புண்ணுகி
விண்ணேதனஞ்செயனும்வெளிப்போவென்றுரைத்தானே (௩௭௯)

ஆசைப்பசுபாசமகன்றபதிவீட்டிலேதான்
நேசமுடனின்றினியான்நித்திரைகள்செய்கையிலே
ஓசைச்சிலம்பொலியிலோங்குந்தனஞ்செயன்தான்
வேஷிமவன்மாறிவந்துவெளிப்போவென்றுரைத்தானே ()

ஆடுநதிக்கரையிலம்பரமாமம்பரத்தில்
குடுமலர்ப்பதத்தில்தூங்கியிருக்கையிலே

கூடுதனிலிருந்தகூட்டுறவுபோதுமென்று
வீடுந்தனஞ்செயனும்வெளிப்போவென்றுதைத்தானே. (௫௮௧)

நம்பிக்கருவூரில்நாடிச்சுழிமுனையில்
அம்பிகையைப்போற்றிச்செய்துயானிருப்பதென்றறிந்தேன்
எம்பித்தனஞ்செயனுமென்முகத்தைப்பாராமல்
வெம்பியொருகாலெடுத்து வெளிப்போவென்றுதைத்தானே ()

வட்டமதிபூரணத்தில் மாறுந்தனஞ்செயன்தான்
விட்டதிங்கள்பத்தாச்சுவெளியேபோவென்றுதைத்தான்
அஷ்டதிசையானதிருஆரூரகந்தனிலே
கஷ்டமனுகாமனுமேகருக்குழிவிட்டேகுவனே. (௫௮௩)

கலித்துறை,

நீராப்பிறவிக்கடலையறுத்துச்செழுஞானங்கொண்டு
கூரானவம்பிகைபொற்பதமேவிக்கொடிதாகவென்னை
நேரானதிங்கள்பத்துஞ்சென்றுநிலைத்துதென்று
பாராத்தனஞ்செயனோர்பாதந்தூக்கிப்படவுதைத்தே. (௫௮௪)

குடிவாழ்க்கைவிட்டுப்பசுபாசமற்றுக்குருவினிட
அடிபோற்றிநின்றுவயிர்தழுண்டேன்வாலாம்பிகையை
முடிபார்த்துநின்றவள்பாதாரவிந்தமுழுங்கையிலே
அடிபார்த்தனஞ்செயன்தலைமேலுதைத்துவிருத்தினனே. (௫௮௫)

வாளாகிநின்றவிழிமடவார்கண்மயக்கம்விட்டு
தேளாகியோடும்பசியைவிட்டுச்சிவஞானத்திலே
மூளாமல்நின்றந்தவம்பிகைப்பாதமுழங்கையிலே
கீழாலேபோவென்றுதைத்தான்தனஞ்செயன்கிடுகிடவே. ()

தான்மோகங்கொண்டந்தமூலத்தின்வாசலில்சார்வுவிட்டு
வான்மோகங்கொண்டந்தவம்பிகைபாதத்தில்வளங்கையிலும்
நான்மோகங்கொண்டுதனஞ்செயன்பார்த்துநடவுமென்றால்
யான்மோகங்கொண்டேனபிராமியுந்தனடைக்கலமே. (௫௮௭)

வாவென்றழைத்துசிவ்வென்றவீட்டின்வனாதனிலே
வேவென்றுஆயிவிதித்துவைத்தாளேந்தன்வேதனைகேள்
போவென்றுதைத்துத்தனஞ்செயன்வந்துபோராடுகிறான்
ஆவென்றுசக்கரத்தபிராமியுந்தனடைக்கலமே. (௨௮௮)

தாங்கியமூலக்கருக்குழியாசைதயவுவிட்டு
தேங்கிக்கருணைதித்திக்கவுண்டுசெழித்தேயிருந்தே
ஓங்கித்தனஞ்செயன்புவிதனில்போவென்றுதைத்துநின்றான்
ஆங்கியசக்கரத்தபிராமியுந்தனடைக்கலமே. (௫௮௯)

ஒழியாதசேணிமூலத்திறைசையொழித்துவிட்டு
வெளியேகியம்பிகைபாதாரவிந்தமிகத்துதித்தேன்

